# தளபதி



"நாடகக் கலை ஆசிரியர்."

வீ.எஸ்.வீரநாதக் கோனார்

# தளபதி

"நாடகக் கலை ஆசிரியர்"

வீ. எஸ். வீரநாதக்கோனார் அவர்கள்

இயற்றியது.



வெளியீடு:

**கலாமன்றம்**

அம்பலத்தாடி,

குமாரம் போஸ்டு, மதுரை.



[விலை ரூ. 1-8-0.

# பதிப்புரை

---

உத்தம நீதிபதி உத்தியோகம் வகித்து ஓய்வு பெற்றிருக்கும் "நாடகப்பேராசிரியர்" ராவ்பகதூர் ப. சம்பந்த முதலியார் அவர்கள் வரவேற்புக்கழகத் தலைவராயிருந்து 9, 10—2—46ல் சென்னை சுகுண விலாச சபா அரங்கில் நடைபெற்ற தமிழ்நாடு மூன்ருவது நாடகக்கலை மகாநாட்டில், "நாடகக் கலை ஆசிரியர்" என்ற சிறப்புப் பட்டம் வழங்கப்பெற்றதன்மூலம் நாடக உலகுக்கும், தற்போது நாடெங்கும் நற்புகழ் பெற்றுவரும் "ஏவி. யம். நாம் இருவர்" பேசும படப் பாடல்கள் எழுதியதன்மூலம் சினிமா உலகுக்கும் நன்கு அறிமுகமாகியுள்ள வித்வத் பகதூர், வீ. எஸ். வீரநாதக் கோனர் அவர்கள் இயற்றிய தளபதி என்னும் சரித்திரக் கற்பனை நாடகத்தைப் புத்தக உருவாக்கும் முதற்பதிப்புரிமையை நமது கலாமன்றத்துக்கு உதவிய ஆசிரியர் அவர்கட்கும்; முகவுரை, பாராட்டுரை, கருத்துரை, மதிப்புரை, ஆகிய நல்லுரைகள் வழங்கிய தமிழறிஞர்கட்கும் கலைஞர்கட்கும் எமது மனமார்ந்த நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள்ளுகிறேம்.

## அறிவிப்பு :

தளபதி நாடகத்தின் சகல உரிமைகளும் ஆசிரியர் திரு. வீ. எஸ். வீரநாதககோனர் அவர்கட்கே உரியது.

இந்த நாடகத்தை அரங்கமேடையில் நடிக்க விரும்புபவர்களும் ஏனைய துறைகளில் எடுத்தாள விரும்புபவர்களும் ஆசிரியரின் முன் அனுமதி பெறவேண்டும்.

தமிழ் நிலையம்,
அம்பலத்தாடி,
குமாரம் போஸ்டு, மதுரை



இங்ஙனம்
கலாமன்றத்தார்
சிறுவாலை ஜமீன்.

சென்னைத்தமிழ் எழுத்தாளர்சங்கத் தலைவரும், பன்னூலாசிரி
யரும்,'பிரசண்ட விகடன் பத்திரிகாசிரியருமான
உயர்திரு. நாரண-துரைக்கண்ணன் (ஜீவா) அவர்கள் வழங்கிய

# முகவுரை

---

இயல், இசை, நாடகம் என்ற மூப்பிரிவுடன் கூடி விளங்குவதால் "முத்தமிழ்" என்று சிறப்பிக்கப்பட்டுவரும் தமிழ் மொழியில்வேறு எபமொழிக்கும் கிட்டாத பெருஞ் சிறப்புப் பெற்றுள்ள தமிழ் மொழியில்—நல்ல நாடக மில்லை ஏன்? நாடகமேயில்லை என்று ஒரு சிலர் சொல் லக்கூடிய அளவுக்கு இடைக்காலத்தில் தமிழ் நாடகக்கலை சீர்குலைந்து போனது, ஆனால் தமிழ் இலக்கியம் புது மலர்ச்சி பெற்றுவரும் இச்சமயத்தில் நாடகாசிரியர்கள் பலர் தோன்றி நாடகங்களை எழுதி வருவது மகிழ்ச்சிக் குரிய விஷயமாகும். எதிர்காலத்தில் நல்ல நாடகங்கள் தமிழில் தோன்றும் என்பதற்கு இது ஒரு நல்ல அறிகுறி என்று நான் நினைக்கிறேன்.

நாடக உலகில் நல்ல பரிச்சயமுள்ள நண்பர் வீரநாதக் கோனார் அவர்கள் "தளபதி" என்ற நாடகமொன்றை எழுதியிருக்கிறார். இது பழைய ராஜா, ராணி கதையாக இருந்தாலும் புதிய கருத்துகள் ஆங்காங்கே காணப்படு கின்றன. இது சரித்திரக் கதைபோல் காணப்பட்டாலும் கோனாருடைய கற்பனையில் உதித்த கட்டுக் கதைதான். கோனார் தமது நாடக அனுபவத்தைக் கொண்டு நன்றாக இதை அமைத்திருக்கிறார். இரு தளபதி களிடையே பொறாமையும், பகைமையும் பூசலும் உண்டாவதற்குக் காரணமாயிருந்த வீரவாளைக் கருவியாக வைத்தே இந்த நாடகத்தை அவர் வனைந்திருக்கிறார். விஜயேந்திரன் கடைசிக் காட்சியில் குறிப்பிடுவதுபோல விஜயபுரிவேந்தர் வெற்றி வீர பூபதிமுன் வாட்போரில் வெற்றி யடைந்த தற்காக விஜயேந்திரன் வீரவாள் பரிசுபெற்றதைக் காணச் சகிக்காது தளபதி நாகநாதன் அவன்மீதுகொண்ட வஞ் சத்தின் விளைவே இந்நாடகத்தின் காட்சிகளாக அமைந்

இன்று ஸ்பெஷல் நடிகர்கள் என்றவுடன் ரஸிகர்கள் அவர்களிடம் முக்கியமாய் எதிர்பார்ப்பது பாடல்கள் தான். காரணம், நடிக்கும் கதை ரஸிகர்களுக்குப் பழங் கதையாகிவிட்டது தான்.

இந்த ருசியை மாற்றவேண்டுமானுல் ஸ்பெஷல் நடிகர்களிடையேயும் புதிய நாடகங்கள் இடம் பெறவேண்டும். இவ்வித மாற்றம் காணும்போது உடனடியாக சமூக நாடகங்களை நடிக்க முயல்வதைவிட தளபதி போன்ற சரித்திரக் கற்பனைகளை நடிப்பது ரஸிகர்களால் நன்கு வரவேற்கப்படலாம். கவர்ச்சியான உடைகளை அணிந்துகொள்ளவும், பாடல்களுக்குப் போதிய சந்தர்ப்பமளிக்கவும் இத்தகைய நாடகங்களே துணைபுரியும்.

ஆகவே, ஸ்பெஷல் நாடக நடிகர்கள் பழைய நாடகங்களை ஒதுக்கிவிட்டு தளபதி போன்ற புதிய நாடகங்களை நடிக்க முன்வருவார்களானுல், வளர்ந்துவரும் நாடகக் கலையை வளர்க்கும் திருப்பணியில் தாங்களும் பங்கு கொண்டவர்கள் ஆவார்கள் என்பதை எடுத்துக் கூற விரும்புகிறேன்.

நாடகக்கலை வளர்ச்சிக்காகவும், அத்துறையில் ஈடுபட்டுழைத்து வரும் கலைஞர்களின் நலன்களுக்காகவும் தமிழகத்தில் ஆங்காங்கு பணியாற்றிவரும் சங்கங்களும் கழகங்களும் இத்தகைய நாடகங்கள் ஸ்பெஷல் நடிகர்களிடையே அரங்கேறுவதற்கு எல்லா வகையிலும் முயற்சியெடுத்துக்கொள்ள வேண்டுகிறேன்.

ஆசிரியர் இத்தகைய மாற்றத்திற்கு உதவும் முறையில் இன்னும் பல நாடகங்களை இயற்றி வெளியிட்டுத் தனிப்பட்டவர்கள் நடிக்கும் நாடகப் பணிக்கு உதவி, நாடகக்கலையை வளர்ப்பாராக!

'அவ்வையகம்' சென்னை-6 }
6—8—51.

"அன்பு"
டி. கே. ஷண்முகம்.

———

சிதம்பரம் மஹாதேஜோ மண்டல வித்வானும், ராஜா விக்கிரமா முதலிய பல தமிழ் சினிமாப்படங்களின் ஆசிரியருமாகிய
திரு A. M. நடராஜ முதலியார் அவர்களின்

## மதிப்புரை

வெண்பா

**வித்வத் பகதூர்சீர் வீரநா தக்கோனூர்**
**முத்தமிழ்க் கலாநிபுண முதறிஞர்........சித்தரித்த**
**நன்னூல் தளபதி நாடகநூ லிந்நூற்கிங்**
**கெந்நூலு மீர்லே யிணை.**

அழகிய பற்பல இலக்கிய நூல்களைப் பெற்றுள்ள தமிழ்மொழி பழமையிற் சிறந்திருத்தல் போல் செழிப்பிலும் சிறந்து விளங்கும் ஒரு பெருஞ்சுவைக் களஞ்சியம். அதிலும் நாடகத் தமிழ் தனிசிறந்தது.

நாடக முன்னேற்றம் குறைவான இக்காலத்தில் தளபதி யென்னும் பெயரிய இந் நாடகநூலை நான் காண நேர்ந்தது பெருமகிழ்ச்சியே.

தளபதி, நாடகநூல்களுக்குத் "தளபதி" யென்றும் "தலபதி" யென்றும் கூறலாம். தமிழ்ச்சுவையும் சிக்கற்ற நடை நலனும் வாய்ந்து கற்கக் கற்க அறிவின்பம் பெருக்கும் பொருட்சுவை நிரம்பி மிக அழகாகத் திகழ்கின்றன. இந்நூலின் ஆசிரியர் திரு. வீ. எஸ். வீரநாதக்கோனூர் ஆவர். இவர் எனது நண்பர். யாப்பியல் நன்கறிந்தவர். மதுரையைச் சார்ந்த சிறுவாலே ஜமீன் சமஸ்தான வித்வான். இவருக்கு நாடகக் கலை வளர்ச்சியில் ஆர்வம் அதிகம். தமிழுக்குத் தொண்டு செய்வதே இவரது நோக்கம்.

இவரெழுதிய இக்கதை சுவையிலும் சிறந்திருத்தலோடு, நீதிகளும், நுண்பொருள்களும் நிறைந்து சரளமான நடையிலினிது செல்கிறது. இது நாடக நூல்களுக்கு நல்லணிகலன். பொதுவாய் நடிகர்களுக்கும், ஏனையோர்க்கும் இந்நூல் நன்கு பயன்படுமென்பது என் நம்பிக்கை. ஆகவே இதனை அனைவரும் ஆதரித்து, இன்னும் பல நூல்களை இயற்ற ஆசிரியரை ஊக்குவிக்கும் வண்ணம் வேண்டுகிறேன்.

சென்னை
29—6—51

A. M. நடராஜ கவி

# தளபதி

*

## நாடக பாத்திரங்கள்

| | |
|---|---|
| விஜயேந்திரன் | : கதாநாயகன் |
| தர்மாட்சி | : விஜயேந்திரன் தாய் |
| இந்திரானந்தர் | : தவமுனிவர் சாந்தி மகாத்மா |
| வெற்றி வீரன் | : விஜயபுரி மன்னன் |
| வீரகுமாரன் | : வெற்றி வீரன் மகன் |
| ஆலகாலன் | : விஜயபுரி மந்திரி |
| நாகநாதன் | : விஜயபுரி சேனாதிபதி |
| இராஜராஜக்கிரீடன் | : வசந்த நாட்டு மன்னன் |
| அதியுக்தன் | : விஜயபுரி அரசதூதன் |
| சந்திராங்கனை | : கதாநாயகி |
| பீமாங்கதன் | : உத்தம நாட்டு இடைக்கால [மன்னன் |
| ஜெயச்சந்திரன் | : சந்திரபுரி மன்னன் |
| உத்தம பூபதி | : சந்திரபுரிமந்திரி, கதாநாயகன் தந்தை |

குருகுல மாணவர், காவலர், ஏவலர்,
கொலைஞர், சகிகள் மற்றும்.

நிகழ் இடம்: விஜயபுரியைச் சார்ந்த காட்டிலும், விஜயபுரியிலும், வசந்த நாட்டிலும், சந்திரபுரியிலும் அதைச் சார்ந்த காட்டிலும்.

---

# தளபதி



# வீரவாள்

*

## காட்சி 1

இடம்: காடு. காலம்: குளிர் காலை.

இருப்போர்: இந்திரானந்த மகரிஷி, தர்மாட்சி.

(இந்திரானந்தர் சூர்ய நமஸ்காரம் செய்து கொண்டு பாடுதல் "சூரிய உதயம்")

(தர்மாட்சி அப்போதுதான் பிறந்துள்ள ஆண் குழந்தையைப் பார்த்துக்கொண்டே கண்ணீர்விட்டு தீனதொனியில்)

தர்மாட்சி :—ஆதியே! இதுதானு உன் கருணை! இரக்கமே உருவமாமே உனக்கு, என் வரையில் அது இறந்து விட்டதா? என் வாழ்வு கண்ணீரால் எழுதவேண்டிய சோகச்சித்திரந்தானு? எங்கும் நிறைந்தவனே! ஏறிட்டுப் பார்க்க மாட்டாயா என்னை. இன்னல் தீர்க்க மாட்டாயா ஆ!! (சோர்வு)

இந்திரானந்தர் :— (பாடியபடியே நெருங்கி வந்து) என்ன இது? விலங்கினம் வாழும் காட்டிலே வேதனைக் குரல்! (உற்றுக் கேட்டு) அதுவும் பெண் குரல். (சுற்று முற்றும் பார்த்து) (தர்மாட்சியைக் காணல்) ஆமாம் பெண்தான். (நெருங்கி) பெண்ணே!

தர்மாட்சி :—சுவாமி! வணங்குகிறேன் சற்று விலகி நில்லுங்கள் பிரசவ அசூயை—

இந்திரா :—(குழந்தையையும் தாயையும் மாறி மாறிப் பார்த்து) நீ யாரம்மா? வீட்டிலே உற்றார் துணையோடு பெற்

றெடுக்க வேண்டிய பாலனைக் காட்டிலே பெற்று கண்ணீர் சோர நிற்கிறுயே நீ எந்த ஊரம்மா? உனக்கு வந்த இந்தக் கதி விதியா? அல்லது வீணர் செய்த சதியா?

தர்மா :—சுவாமி! வேதனை என் வாயைப் பூட்டுகிறது.

(அப்படியே மூர்ச்சை யடைகிருள்.)

(இந்திரானந்தர், கெண்டிநீர் தெளித்து, மூர்ச்சை தெளிவிக்கிருர்) (தெளிந்தெழுந்து வணங்கி)

மன்னிக்க வேண்டும்! நினைத்தாலே நெஞ்சு கலங்கும் என் வாழ்வைப்பற்றி. சுவாமி! இந்த ஆண் குழந்தை இருக்கவேண்டிய இடத்தில் இருந்து பிறக்கவேண்டிய முறையில் பிறந்திருந்தால்—

(உள்மாற்றுக் காட்சி) (காட்சி 1. "அ.")

(அரண்மனை அந்தப்புரத்தில் அநேக பணிப் பெண்கள் சந்தோஷமாக ஓடியாடி குழந்தையை யெடுத்து, சீராட்டிப் பாராட்டி, தாயிடம் கொடுக்கவும், தாய் அரசனிடம் கொடுக்கவும், தான தருமங்கள் நடக்கின்றன.—)

(தங்கத்தொட்டிலில் குழந்தையைக் கிடத்தி அனைவரும் சூழ நின்று தர்மாட்சி தாலாட்டுகிருள்.)

(திருப்புக் காட்சி (காட்சி 1. 'ஆ' முன்னைய காடு: காலை)

இந்திரானந்தர் :—பெண்ணே! அறிவேன் வருந்தாதே! "வாழ்வு" இன்ப துன்பங்களுக்கு இடையே ஆடியலையும் ஒரு ஊஞ்சல். நீ விரும்பினுல் உன்னை இப்போதே உன்னுடைய ஊரில் கொண்டு போய்ச் சேர்க்கிறேன்.

தர்மாட்சி :—சுவாமி! பட்டினிப் பாட்டாளிக்குப் பாலும் சோறும் கிடைத்தாற்போல எனக்கு மீட்சி தந்தீர் சுவாமி! நான் ஊர்செல்ல விரும்பவில்லை, அமைதி நிலவும் இவ்வாரண்யத்திலே அன்பே உருவான அடிகளுக்கு பணிவிடை செய்ய விருப்பம் சுவாமி!

அலையும் என் உள்ளத்துக்கு அதுதான் அமைதி பிரபு.

அஞ்ஞானத்தை அகற்றி, மெய்ஞ்ஞானத்தைப் புகட்டும விஞ்ஞானத் தந்தையே! அடைக்கலம்!

இந்தி:—மகளே! வருந்தாதே. அப்படியே ஆகட்டும். அம்மா! இன்பமும் துன்பமும் பின்னிக் கிடப்பவை இன்றுவரை இன்பமேகண்டாரும துன்பமே கொண்டாரும் எவருமில்லை. "வாழ்வு" பாலையும் சோலையும் நிறைந்த பரந்த வெளி நிலம்.

அதோ என் குடிசை, அங்கு போகலாம்! எங்கே குழந்தையை இப்படிக் கொடு!

(சிரமத்தோடு குழந்தையைக் கொடுக்கவும்.)

என்னோடு இவ்வழியே வா அம்மா!

(போகிறார்கள்.)

—

## காட்சி 2

இடம்: இந்திரானந்தர் ஆசிரமம். காலம்; முற்பகல்

இருப்போர்: தர்மாட்சி இந்திரானந்தர். முனிவர்கள் (தொட்டிலில் குழந்தை) ஒவ்வொருவராக வந்து அமருகின்றனர். அனைவரையும் வரவேற்று—

இந்திரானந்தர்:—மெய்யறிவிற் சிறந்த மேதகு முனிவரர்களே! விழாப்போது நெருங்கி விட்டது, தர்மாட்சி தேவியின் தவப்பயனாக அவதரித்துள்ள அவன் வாழ்வு உலகிற்கு ஒரு விளக்கமாக இருக்க வாழ்த்துங்கள்! (எல்லோரும் சிறிது நேரம் மௌனம்)

பரமானந்த சுவாமிகளே! தாங்கள்—

பரமா:—இல்லை இல்லை. யோகானந்த அடிகளே உரைக்கட்டும்.

யோகா:—அதோ, ஆகமானந்த சந்நிதிகளே அருளட்டும்.

ஆகமா:—(இந்திரானந்தரைப் பார்த்து) சந்நிதானமே சகல பொருத்தமுங் கூடிய ஒரு நல்ல பெயராக சாற்றியருளட்டும்.

இந்தி ;—(தர்மாட்சியைப் பார்க்கிறார்.)

தர்மா :—(வணங்கி) எனக்கொன்று தோன்றுகிறது, சந்நிதானங்களின் சம்மதமும் கட்டளையும் பிறக்குமானல்—

முனிவர்கள் :— நன்ருய் தாராளமாய்ச் சொல்லம்மா.

தர்மா :—அப்பா! விஜயபுரி எல்லையில் பிறந்தான் அதனல் அதன் முதல் பகுதியும், தங்கள் அணைப்பிலே வளர்ந்தான் ஆதலால் தங்கள் திருநாமத்தின் முதல் பகுதியும் சேர்த்து—

யோக :— விஜய + இந்திர.

இந்தி :— "விஜயேந்திரன்" என்று அழைப்பதா ?

எல்லோரும் :— ஆம் ஆம்! அது தான் சரி, நல்ல பெயர்.

இந்திர :— (தொட்டிலை நெருங்கி குழந்தையைப் பார்த்து) விஜயேந்திரா ! விஜயேந்திரா !

எல்லோரும் :—வாழ்க விஜயேந்திரன்! வெல்க விஜயேந்திரன் !

—

## காட்சி 3

இடம் : காடு, ஆசிரமத்தை அடுத்த வெளி.

காலம் : பகல்.

இருப்போர் : இந்திரானந்தர் குருகுலமாணவர்கள்.

சந்திரன் :—டேய் ஆனந்தா? எங்கேடா விஜயேந்திரன் ?

ஆனந்தன் :—அவன் எங்கேயாச்சும் ஏடும் சுவடியுமா படிச்சுக்கிட்டே யிருப்பாண்டா.

மதியழகன் :—அப்புறம் என்னமோ சீமையைப் புடிக்கிறவன் மாதிரி படிச்ச நேரம் போக பாக்கி நேரமெல்லாம் வில்லுங் கையுமா வெளியே கௌம்பிடுவான் வீராதி வீரப்புலி.

மெய்யன் :—ஒங்களுக்கேண்டா இவ்வளவு பொருமை?

சந்திரன் :—பொருமேயில்லடா, நாமளுந்தாங் குருநாதர் கிட்ட படிக்கிறோம். வெளையாடுறோம். கொஞ்ச நேரமாச்சும் வெளையாட வந்தாத்தானேடா நல்ல பையன்.

மெய் :—அப்போ வெளையாட வராதவன் கெட்டவனுடா?

ஆனந் :—இவன் மகா மேதாவி டாப்பா.

சந்தி:—மேதாவி யின்னு வால் இருக்காடா ?

மெய்:—கொரங்குக்கல்ல வால் இருக்கும்.

ஆன:—மேதாவியின்னு மேலேதாவுறது கொரங்குதானே.

மதி :—ஓஹோ அப்புடியும் ஒரு அருத்தம் இருக்கோ ?

மெய் :—ஏண்டா இப்புடி அர்த்தத்தே யெல்லாம் அனர்த்தம் பண்ணுறீங்க. அப்புடியின்னு நீங்க எல்லோருமே மகா மகா மேதாவிங்கடா.

மதி :—சரீடா. அதெல்லாமிருக்கட்டும் இப்ப என்ன வெளையாட்டுடா வெளையாடலாம்?

சந்தி :—வார்த்தை கட்டி வெ்ளையாடலாமா ?

ஆனந் :—சரி சந்த்ரா ! நீ போயி சீட்டுக்களை யெடுத்து வா ! (சந்திரன் உள்ளே போய்சீட்டுகள் கொண்டுவந்ததும்)

சந் :—இதிலே ஆளுக்கு ஒவ்வொன்னு எடுத்துக்கிங்க. (எடுக்கவும்) எடுத்தாச்சல்ல, சரி ! அதிலே அதிலே இருக்கிற எண்ணிக்கை வரிசைப்படி எழுத்துக்களே சொல்லுங்க !

| | | | |
|---|---|---|---|
| ஆன :— | மானு | ம | 1 |
| சந் :— | டையன்னு | டை | 2 |
| மதி :— | யானு | ய | 3 |
| மெய் :— | இன்னன்னு | ன் | 4 |

ஆன :—“மடையன்” மெய்யன்தாண்டா மடையன்.

(எல்லோரும் கைகொட்டிச் சிரித்தல்)

மெய் :—டேய். மடையனும் வேணும் மட்டியும் வேணும். இதென்னடா அசட்டு வெளையாட்டு, நான் ஒண்ணு சொல்றேண்டா.

மதி :—மடையா! நீ ஒண்ணுஞ் சொல்லவேணும் ரெண்டுஞ் சொல்லவேணும். ஒனக்கு "பறவை மூச்சு" தெரியுமாடா?

மெய் :—அப்புடியின்ன?

சந்தி :—அதாண்டா பட்சிகள் மூச்சு விடுறது.

மதி :—அது இல்லேடா அது இல்லே. டேய்! "பறவை" யின்ன என்னடா?

மெய் :—குருவி.

மதி :—மூச்சு இன்ன என்னடா?

ஆனந் :—சுவாசம்.

மதி :—ரெண்டையும் சேத்து

சந்தி :—குருவி சுவாசம்.

மெய் :—ஒஹோ! குருவிசுவாசமா! சபாஷ்!!

(எல்லோரும் சந்தோஷ ஆரவாரம், அதுபோது)

விஜயேந்திரன் .—(வில்லம்புடன் வேஷமாக வந்து) டேய் டேய்! சப்தம் செய்யாதீர்கள். அதோ! அந்த மரத்தில் இரண்டு குருவிகள். (நேரே பார்த்து) அந்த இரண்டு குருவிகளையும் ஒரே அம்பால் விழும்படி எய்ய யாருக்கேனும் சாமர்த்தியம் உண்டாடா?

மெய் :—டேய் விஜயேந்த்ரா! நம்ம குருநாதர் ஜீவஹிம்சை செய்யப்படாதுன்னு சொல்லியிருக்க—

விஜ :—ஆம் மெய்யா! நல்ல வேளையாக ஞாபகப் படுத்தினாய்.

மெய்:—ஞாபகப்படுத்தி னயா! யாருடா நாய்? என்ன சொல்லினாய்?

சந்தி :—ஞாபகப் படுத்தி "னாய்" (கைகொட்டல்)

மேய் :—டேய்! நீ நாய், அவன் நாய், உன் கூட்டாளி நாய்

எல்லோரும் :—டேய்! அவன் சொன்னுல் எங்களை யெல்லாம் ஏண்டா இழுத்துப் பேசுகிருய்? மடையா!

விஜ :—டேய்! சண்டை வேண்டாம். சண்டை போடுபவன் புத்திசாலியாக மாட்டான். வேண்டுவது சமாதானம். சமாதானத்தை விரும்பாதவன் தற்குறிக்குச் சமானம்.

ஆனந் :—சமாதானத்தை விரும்புறபேரெல்லாரும் கை தூக்குங்கோ!

(எல்லோரும் கை தூக்கவும்)

விஜ :—சரி! குறி வைத்துப் பழகுவதற்காக குருவிகளையும் மற்ற பிராணிகளையும் கொல்வதுங்கூட பாபந்தான். அது வேண்டாம் வேறென்ன விளையாடலாம்?

மேய் .—மொதல்லே நீ இந்த வில்லையும் அம்பையும் கீழேவை! பொறகு சொல்ருேம்.

விஜ :—சரி! (வைக்கிருன்.)

ஆனந் :—டேய்! எல்லோரும் வரிசையா நில்லுங்க! நான் ஒவ்வொருத் தரையும் ஒவ்வொரு கேள்வி கேப்பேன் ஒடனே மளமளன்னு பதில் சொல்லணும் (மெய்யனைப் பார்த்து) என்ன?

மேய் :—மள மள மள மள மள மள.

ஆனந் :—டேய் நிறுத்து!

மேய் ;—ஆச்சு.

ஆனந் :—அப்பிடியில்லேடா மடையா! அப்பிடியில்லே. கேட்ட கேள்விக்குப் பதிலே சீக்கிரமா மளமளன்னு தங்கு தடையில்லாமே சொல்லனும்டான்னு—

மேய் : அப்பிடியா அது சரி.

விஜ :—சீக்கிரமாய்ச் சொல்லவில்லை யென்ருல்?

ஆனந் :—அவனே வெளையாட்டுலே சேக்கிறதில்லே.

எல்லோரும் :—அது சரி அது சரி (குதிப்பு)

ஆனந் :—(கைநீட்டிக் காட்டி) உன் வயதென்ன ?

மதி :—ஏழு.

ஆனந் :—உன் ஊர் எது ?

சந்தி :—சாந்திபுரம்.

ஆனந் :—குருநாதர் பேர் என்ன ?

1-வது :—இந்திரானந்தர்.

ஆனந் :—எங்கே வாசிக்கிறே ?

2-வது :—ஆனந்த குருகுலத்தில்.

ஆனந் :—உன் பேர் என்ன ?

மெய் :—மெய்யன்.

ஆனந் :—உன் அம்மா பேர் என்ன ?

3-வது :—கலாதேவி.

ஆனந் :—உன் அப்பா பேர் என்ன ?

விஜயேந் :—என்— என்— என்— ன்........!

ஆனந் :—சொல்லுடா ! ஒன்னு ! ரெண்டு ! மூனு.

எல்லோரும் :— தோத்துட்டாண்டா தோத்துட்டாண்டா டேய் ! விஜயேந்திரன் தோத்துப் போயிட்டான்.

3 வது பையன் :—ஏண்டா இவ்வளவு பேசறே படிக்கறே அப்பா பேரு தெரியாதாடா ?

சந்தி :—இவனுக்கேதுடா அப்பா, இவனையும் இவங்க அம்மாவையுந் தானேடா நம்ப குருநாதர் கூட்டி வந்தாரு அடுத்த காட்டுலேயிருந்து.

மெய் :—அப்பிடியின்னு ஒனக்கு அப்பாவேயில்லையாடா ?

ஆனந் :—தகப்பம்பேரு தெரியாத பிள்ளை தானுடா நீ! அப்போ தாந்தோணிச் சாமீன்னு சொல்லு !

விஜயே :—ச்சீ போடா— (என்று ஆனந்தன் கன்னத்தில் அடித்துவிட்டு, வில்லம்பை எடுத்து ஓடுகிறான்.)

## காட்சி 4

இடம்: ஆசிரமம், காலம்: பகல்.

(தர்மாட்சி, தேவி பூஜைசெய்ய மலர்களைச் சுத்தம் செய்து கொண்டிருக்க ஆத்திரத்தோடு பதறி ஓடி வந்து துடிதுடித்து)

விஜயேந்திரன் :—(நின்று நிமிர்ந்து பெருமூச்சு விட்டு விட்டு) அம்மா! என் அப்பா யார்? (உரக்க) என் அப்பா எங்கே யிருக்கிறார்? (ஏற இறங்க நோக்கல்)

தர்மாட்சி :—(பதறி) கண்ணே! (ஆச்சரியத்தோடு பார்த்து) ஏன் இப்படிப் பதட்டப்படுகிறாய்?

விஜ :—பதட்டப்படும்படி பண்ணி விட்டார்களம்மா பையன்கள் (நிமிர்ந்து) அம்மா! அதெல்லா மிருக் கட்டும். என் அப்பா யார்? என் அப்பா எங்கே யிருக்கிறார்? (துடித்து) சொல்லம்மா சீக்கிரம்.

தர்மா :—அப்பா! பொறு! அமைதி பெறு! அமைதி.

விஜ :— "அமைதி" அவமதிப்பு ஏற்பட்டவனுக்கு ஏதம்மா அமைதி. ஆத்திரம் முட்டுகிறது. (கெஞ்சு தொனியில்) அம்மா! அம்மா! தாமதம் வேண்டாம்! சொல்லம்மா! என் அப்பா யார்?

தர்மா :—அவமதிப்பா! உனக்கா?

விஜ :—ஆம்! அப்பனறியாத அநாதிப் பிள்ளையென்று அந்தப் பயல்கள் பேசி நகைத்தது எனக்கு அவ மதிப்பில்லையா? சொல்லம்மா! உடனே ஓடி என் அப்பாவின் பெயரை ஆயிரம் முறை கூறி அவ மதிப்பை மாற்றி ஆடவேண்டும். உம்—ம்! என் அப்பா யார்? சொல்லம்மா! (துடிதுடித்துப் பதறல்)

தர்மா :—(தனக்குள்) ஐயோ! குழந்தை உள்ளத்தைக் குழம்பும்படி குதர்க்கம் செய்திருக்கின்றனர் குறும் பர்கள் யாரோ?

விஜ :—(பதறி) ஏனம்மா தாமதம்? சொல்லம்மா! என்

அப்பா யார்? (கைகால்களை உதறி) யாரம்மா என் அப்பா?

தர்மா :—கண்ணே வா! தேவி பூஜைக்கு நேரமாகிறது தெய்வவணக்கம் செய்வோம்.

விஜ :—அம்மா! தெய்வ வணக்கம் என் முதல் வேலை யல்ல. அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம், அவ்விதம் முன்னே அறியவேண்டிய தெய்வங்களில் முதல் தெய்வமாகிய உன்னை அறிந்து கொண்டிருக்கிறேன். இரண்டாவது தெய்வமாகிய பிதாவை அறிந்து வணங்காதிருப்பது முறைத்தவறு தானே அந்தத் தவறை நிவர்த்தித்து என் தந்தையின் பெயரைத் தெரிந்து சொல்லி விளையாட்டுத் தோழர்களிடம் வெற்றிபெற வேண்டும், அதுவரை தீரவே தீராது அவமதிப்பு (பதறி) சொல்லம்மா! ஏனம்மா சும்மா நிற்கிறாய்? என் அப்பா யார்?

தர்மா :—(தனக்குள் துக்கம்) ஐயோ எப்படி இவனிடம் சொல்வது? சொன்னால் கொழுந்துமனது குழைந்து விடுமே. (கண்ணீர் விடுகிறாள்.)

விஜ :—(பதறி) அம்மா! என் அப்பாவை நான் அறிந்து கொள்ளக்கூடாதா? ஏனம்மா இவ்வாறு சோகப்படுகிறாய்?

சரி! அப்பாவின் பெயரை நீ உன் வாயால் சொல்லக்கூடாதென்று கூசி மறைக்கிறாயா? அப்படியானால் கையால் எழுதியாவது காட்டம்மா தெரிந்து கொள்கிறேன் எங்கே....!

தர்மா :—(ஏங்கி) கண்ணே! (விம்மி நின்று) தெய்வபூஜைக்கு.

விஜ :—"தெய்வம்" அம்மா! மாதா பிதா குரு தெய்வம் எனவே நான்காவதாக நான் வழிபட வேண்டிய தெய்வபூஜையைக் காட்டி முதல் தெய்வமாகிய நீ இரண்டாவது தெய்வமாகிய பிதாவைக்கூற காட்ட மறுக்கிறாய். மூன்றாவது தெய்வமாகிய எழுத்தறி

வித்த இறைவனுங் குருநாதரிடம் சென்று இரண்டாவது தெய்வமாகிய பிதா யார் என்பதைத் தெரிந்து ஜெயம் பெற்று வருகிறேன்.

(ஓடி விடுகிறான்.)

—

## காட்சி 5

இடம்: ஆசிரமம். காலம்: பகல்.

(இந்திரானந்தர் அமர்ந்திருக்க)

விஜயேந்திரன் :—(வேகமாக வந்து வணங்கி நிமிர்ந்து பதறி) சுவாமின்! மன்னிக்கவும், எனது தந்தை இன்னார் என்பதை அறிய விருப்பம். தாயிடம் கேட்டேன் தக்க பதிலில்லை. சந்நிதானத்தில் அடியேன் விண்ணப்பம். யார் எந்தை?

இந்திரானந்தர் :—(யோசித்து தலையை அசைத்து) விஜயேந்த்ரா! உட்கார்! உன் சுவடியை எடு! நான்காவது ஏட்டைத் திருப்பு!

"உன் தந்தை என் தந்தை யென்றொருவ னில்லை
உலகுக் கொருவனே தந்தை"

மாற்றுக் காட்சி (அ) (பாடலுடன்)

(பனிரண்டு வயது விஜயேந்திரனுக்கு தாய் அணிபணிகள் பூட்டி ஆசிசெய்தல்)

மாற்றுக் காட்சி (ஆ)

(பதினெட்டு வயதுள்ள விஜயேந்திரன் சோலையில் வில்லம்புடன் உலவி காட்சி காணல்)

மாற்றுக் காட்சி (இ)

(வாலிப விஜயேந்திரன் அடக்கத்துடன் அமர்ந்து பாடங் கேட்டபடி யிருக்க)

இந்திரானந்தர் :—விஜய! மனிதன் கண்ணைத் திறப்பது கல்வி. மக்கள் மாக்களாக மாறுபடுவது கல்வியின்மையால், வான்புகழ் கொண்டார் வள்ளுவனார் திருக்குறளால். சிறந்த சிலப்பதிகாரத்தைச் செந்

தமிழால் சீர்பெறச் செய்தார் சேரநாட்டு இளங்கோ. ஒல்காப் புகழ் பெற்ருர் தொல்காப்பியர். நந்தா மணி விளக்காகும் சிந்தாமணி தந்தார் திருத்தக்கதேவர். எல்லாம் கற்ற கல்வியினுல்தான். "கற்க! கசடறக் கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக" என்ருர் வள்ளுவர். வள்ளுவர் அனைத்துலகப் புலவர். குறள் உலகப் போது மறை. குறள் போல வாழ்! திருக் குறள் அமைக்கும் வாழ்வு திவ்ய ஆனந்த தெய்வ வாழ்வு. அதை விரும்பு! குறளில் இல்லாதது குவல யத்தில் இல்லை. அது காலங் கடந்தது, சமய பேதங் கடந்தது. வாய்மைக் குறள் வாழ்க! வள்ளுவனுர் புகழ் வாழ்க!

விஜ :—வண்மைக் குறள் காட்டும் வழியே வாழ்கிறேன் சுவாமி.

இந்தி :—விஜயேந்த்ரா! இன்றைய பாடம் இதோடு நிற் கட்டும்.

விஜ :—ஆக்ஞை! (எழுந்து நின்று) சுவாமி! கொஞ்ச நாட் களாக வெளியே சுற்றிப் பார்க்கவில்லை ஆகவே இன்று வனங்காண விருப்பம். விடைபெற விழை கிறேன்.

இந்தி :—விஜயேந்த்ரா! என் விடையை நான் தந்து விட் டேன். உன் அன்னையின் விடைபெற்று ஆனந்த மாய்ப் போய் வா!

(விஜயேந்திரன் வணங்கிச் செல்கிருன்)

(தர்மாட்சி அமர்ந்திருக்க)

விஜயே :—(வந்து வணங்கி) அம்மா! இன்று வனத்தின் வளங்காண விரும்புகிறேன். விடை தாருங்கள்! குருநாதரும் அனுமதியளித்துள்ளார் தாயே!

தர்மா :—கண்ணே! தொலை தூரம் போகாமல் அடுத் துள்ள இடங்களை மட்டும் பார்த்து விட்டு விரைவில் வந்துவிடு! தாமதிக்காமல். (உள்ளே சென்று, அம்பு வில்கொண்டு கொடுத்து) சுகமே போய்வா அப்பா!

(விஜயேந்திரன் வணங்கிச் செல்கிருன்)

## காட்சி 6

இடம்: காடு. காலம்: காலை.

இருப்போர்: வெற்றிவீரமன்னன், நாகநாத தளபதி, ஆலகால அமைச்சர்.

வெற்றிவீரன் :—(நடந்துகொண்டே) இயற்கையே ஒரு சித்திரச் சாலை. இந்த மலர்களெல்லாம் அழகின் சிரிப்பு. நாகநாதரே! அதோ பாரும் எட்டி மரத்தைச் சுற்றி முல்லைக் கொடி அது ஏன்?

நாகநாதன் :—அது பருவத்தின் இயற்கை. வேந்தே! படரும் பருவம், பக்கத்தில் இருப்பது எட்டியானால் எதுவானால் என்ன? அது காதலரைக் குறிப்பிடுகிறது. கன்னியும் காளையும் கருத்தொருமித்த போது கட்டுக்களென்பதேது.

வெற்றி :—இயற்கை போதிக்கும் நீதியே அலாதி. அமைச்சரே! அதோ நம்மை மகிழ்ச்சியில் ஆழ்த்தும் மலர் மணம். நம் தோளைத் தழுவ வரும் தென்றற் பெண்ணாள்.

ஆலகாலன் :—ஆம்! இனியது நாற்பது என்பதுடன் "இனிது இனிது இளந் தென்றல் இனிது" ஆக இனிது நாற்பத்தொன்று என்று சேர்த்துக்கொள்ளத் தக்க இயற்கை இன்பம் இணையில்லா இன்பம்.

வெற்றி :—இதயத்தைக் குளிர வைக்கும் இகபோக இன்பம.

(மறுபுறமாக சிங்கம் பாய்கிறது வெற்றிவீரனை நோக்கி)

விஜயேந்திரன் :—(எதிர்ப்புறமாய்த் தோன்றி அம்பு எய்து கொண்டே) இன்பம்! துன்பத்தின் பல்லிடுக்கில் இன்பம். (பாய்ந்து சிங்கத்தைக் கொல்லல்)

வெற்றி :—(திகைத்து நடுங்கி நின்று மருட்சி தோன்ற) இது என்ன! கனவா?

விஜ :—(வீழ்ந்துள்ள சிங்கத்தையும் மன்னனையும் மாறி மாறிப் பார்த்து) கனவில்லை "நாடகம்" நீங்கள், அவர்கள்,

நான், இந்தச் சிங்கம், நடிகர்கள் என் பகுதி தீர்ந்தது நான் வருகிறேன்.

வெற்றி :—(தடுத்து) வீரனே நில்! பிறர்க்குதவும் பெருந்தகையே நீ யார்?

விஜ :—பிறர்க்குதவுவதே பிறவியின் பணி. நான் ஒரு ஆசிரம வாசி. என் பெயர் விஜயேந்திரன். என் தாய் தர்மாட்சி அம்மையாரும், என் ஆசான் இந்திரானந்த முனிவரும் அதோ அந்த ஆசிரமத்தில்.

வெற்றி :—அப்படியா? விஜயேந்திரன்! நான் அவர்களைப் பார்க்க வேண்டுமே'

விஜ :—வாருங்கள் போகலாம்.

நாகநாதன் :—அரசே! நம் பரிவாரங்கள்—.

ஆலகாலன் :—நம் வரவை எதிர்பார்த்து—

வெற்றி :—பரவாயில்லை; சென்று விரைவில் திரும்புவோம்.

—

## காட்சி 7

இடம்: ஆசிரமம். காலம்: மாலை.

இருப்போர்: வெற்றிவீரன், நாகநாதன். ஆலகாலன், இந்திரானந்தர், தர்மாட்சி.

(ஆசிரமத்தில் விஜயேந்திரன், வெற்றிவீரன், நாகநாதன் ஆலகாலன் நுழைவு)

(இந்திரானந்தரையணுகி)

விஜயேந்திரன் :—சுவாமி! (வணங்கல்)

வே, நாக, ஆல:—சுவாமின்! (மண்டியிட்டு வணங்குகிறார்கள்)

இந்திரானந்தர் :—(கையமர்த்தி) பல்லாண்டு வாழ்க!

வெற்றி :—சுவாமி! சந்நிதானங்களைக் கண்டது நான் பெற்ற பெரும்பேறு. விஜயபுரி வேந்தன், வெற்றி வீரன் நான்.

நாக :—அவர் தளபதி நாகநாதன் நான்.

ஆல :—அமைச்சன் ஆலகாலன் அடியேன்.

இந்தி :—கொற்றவர் மெச்சும் வெற்றிவீரக் கோமகனே! இவண் நாடிவந்ததின் நோக்கம்? மண்டலத்தை ஆளும் மணி முடிக்கு மனக்குறை இல்லையே?

வெற்றி :—சந்நிதானங்கள் போன்ற மகான்கள் வாழும் நாடல்லவா என் நாடு. எனக்கும் என் நாட்டுக்கும் குறையேது சுவாமி! சந்நிதான தரிசன வாய்ப் பளித்த இவ் வீரனுக்கு மீண்டும் என் நன்றி உரித் தாகுக!

இந்தி :—(வியப்போடு) என்ன இது?

வெற்றி :—ஆம் சுவாமி! வேட்டையாட வந்தோம் காட் டுக்கு, வந்த இடத்தில் என்னை வேட்டையாட இருந்த சிங்கத்தை வேட்டையாடிய வீரன் சுவாமி இவன். உயிர் கொடுத்த உத்தமனை ஊருக்கு அழைத்துச் சென்று சிறப்புச் செய்ய விருப்பம். விடை தரப் பிரார்த்திக்கிறேன் சுவாமி!

இந்தி :—மன்னா! மகிழ்ச்சி. என்னால் தடையில்லை அவன் தாய் அநுமதிக்க வேண்டும்.

வெற்றி :—“அவன் தாய்” அவர்கள் யார் ப்ரபு?

இந்திரா :—அதை நான் வெளியிட முடியாது. ஒன்று மட்டும் உறுதி. ஆளப்பிறந்த மகன் ஆளவும் நாடுண்டு.

வெற்றி :—ஆளப்பிறந்த மகனா? சுவாமி! அறுசுவை உண்டியும், அரண்மனைச் சுகமும், ஆனந்த வாழ்வும் பெறவேண்டிய இவன், ஆசிரமத்திலே ஆருமற்ற அநாதை போல வாழ்வதேன் சுவாமி.

இந்தி :—அதுதான் அவன் வாழ்வின் இரகசியம் அதை வெளியிடும் உரிமை எனக்கில்லை.

வெற்றி :—சுவாமி! ஒரு வேண்டுகோள்.

இந்தி :—என்ன அது?

வெற்றி :—வீரனுக்கு ஏற்றது படைக்கலச்சாலை, வேதபாட சாலையல்ல. அவனை அழைத்துப் போகிறேன். விஜய புரியின் வெற்றித் தளபதியாக ஓங்கி விளங்கட்டும்.

இந்தி :—அப்போது அவன்தாய்?

வெற்றி :—தாங்கள் அநுமதித்தால் அவர்களையும் அழைத் துப் போகிறேன், அம்மை எனக்கு ஒரு சகோதரி, அவன் எனது மகன் போல சுவாமி!

இந்தி :—தர்மாட்சி!

தர்மா :—(வெளிவந்து) அழைத்தீர்களா அப்பா!

இந்தி :—ஆம் அம்மா! (காட்டி) இவர் இந்நாட்டுமன்னர், இனி உன்பிள்ளை விஜயேந்திரன் இந்நாட்டுத்தளபதி, உன்னையும் இவர்கள் அழைத்துப் போகவிரும்பு கிறார்கள். இது உனக்குச் சம்மதமா?

தர்மா :—இதில் என் சம்மதம் என்ன சுவாமி! தங்கள் மனம் போல எங்கள் வாழ்வு.

இந்தி :—தானே வரும் சந்தர்ப்பத்தைப் பயன்படுத் திக்கொள்ளாது தள்ளுவது சரியல்ல, காட்டிலிருக்க வேண்டிய காலம் கடந்துவிட்டது. இனி நாட்டி லிருந்து நற்பேறு பெறவேண்டிய நாள் நெருங்கிவிட் டது, ஆகவே மன்னருடன் சென்று வாழ்வதே தகுதி யென எண்ணுகிறேன். விஜயேந்த்ரா விருப்பம்?

விஜயே :—சுவாமின்! தங்கள் சித்தம்போல.

இந்தி :—விஜயேந்த்ரா! நீ வீரன் மட்டுமல்ல விவேகியுங் கூட, நான் அதிகமாகச்சொல்லவில்லை. "தாய்" தாய கத்தின் சின்னம். அவளைப்போற்று! குறள் போல வாழ்!

"இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்து விடல்."

தீமை செய்தார்க்கும் நன்மைசெய்!
பிறர்க்கிடைஞ்சலின்றி வாழப் பழகு!

மகிதலம்புகழும் மாவீரனாக மாண்போங்கி வாழ்வாயாக! இம் மன்னனுடன் மகிழ்ச்சியாகச் சென்று வாருங்கள்!

தர்மா :—அப்பா! நானுமா? (ஏங்கிமயங்க)

இந்தி —ஆம்!

தர்மா :—அப்பா! போகவா தங்களைப் பிரிந்து (கண்ணீர்)

இந்தி :—(சோர்ந்து) பிரிவு என்னையும் வருத்தத்தான் செய்கிறது. தர்மாட்சி! "விஜயேந்திரன் வாழ்வு" அதை நினைக்கும்போது வருத்தம மறைகிறது. (திரும்பி) வெற்றி வீரமன்ன! இவர்கள் உன் அடைக்கலம்.

வெற்றி :—மனம், மொழி, மெய் மூன்றாலும் தீங்கு நினையேன் சுவாமி!

இந்தி :—மகளே! சுகமே சென்று வாருங்கள்!

தர்மா :—(தயங்கி, துவண்டு) அப்பா! (பிரிய மனமில்லாது நடந்து சென்று மீண்டும் வந்து) அப்பா! (சோர்ந்து விழவும்)

இந்தி :—(தாங்கி, சிரந்தடவி) தியங்காமல் சென்றுவா கண்ணே!

(தர்மாட்சி தள்ளாடிச் செல்ல, ஏங்கி கைகளை நீட்டியபடியே தம்பித்து நிற்கிறார்)
(அனைவரும் செல்லுகின்றனர்)

—

## காட்சி 8.

இடம்: நாகநாதன் தனி அறை. காலம்: பகல்.
இருப்போர்: நாகநாதன், ஆலகாலன்.

நாகநாதன் :—(பெரு மூச்சு விட்டு) உண்மையில்லாத உலகம்.

ஆலகா :—(வந்து நுழைந்து) உணருங்காலம் வரும்.

நாக :—ஆலகாலரே! மன்னவரின் மனம் இப்படியும் மாறும் என்று நான் நினைக்கவே இல்லை.

ஆல :—மன்னவரின் மனமாவது மாறுவதாவது! என்ன உமக்குப் பைத்தியம் பி, த்து விட்டதா?

நாக :—பைத்தியம் பிடிக்க வைத்து விட்டார் மன்னவர்.

ஆல :—என்ன தளபதியாரே! தடுமாறுகிறீர். விஷயத்தை விளங்கச் சொல்லும்.

நாக :—ஏனையா மந்திரியாரே! நம் மன்னவரைச் சிங்கம் கொல்லவரும்போது விஜயேந்திரன் அதைக் கொன்றதனுல் அவனுக்கு சேனுதிபதிப் பட்டம். அதே சிங்கம் உம்மைக் கொல்ல முயன்று நான் அதைக் கொன்றிருந்தால் ஏற்கெனவே சேனுதிபதியாகவுள்ள எனக்கு என்ன பட்டம் கிடைத்திருக்கும்?

ஆல:—வீராதி வீர தீர பராக்கிரம பிரதம சேனுதிபதி பகதூர் நாகநாதர் என்ற விருது பட்டம் கிடைத்திருக்கும்.

நாக:—நன்ருய் ப்பேசுகிறீர் ஐயா!

ஆல :—அது தானே ஐயா அமைச்சரின் வேலை.

நாக :—என்ன ஆச்சரியம்! நகரத்தில் எங்கு பார்த்தாலும் ஆரவாரமும் ஆடலும் பாடலும் அடடடடா ஆனந்த லோகம் என்றே சொல்லலாம்.

ஆல :—இவ்வளவு ஆர்ப்பாட்டங்களும் உமக்கும் எமக்குமல்ல. புதிதாக வந்துள்ள விஜயேந்திரனுக்கு வெற்றி வீர "தளபதி" பட்டம் வழங்கும் விழா நாள் ஐயா பட்டமளிப்பு விழா நாள்.

நாக :—'தளபதி" யார் யார் தளபதி ஸ்தானம் வகிக்கலாம் என்ற நியதி யில்லாமலே போய் விட்டதையா இந்த நாட்டிலே.

ஆல :—நம் மன்னவர்தான் இனிமேல் தம்மேல் ஒரு குருவி மரத்திலிருந்து எச்சமிட நினைத்தாலும், அதை ஒருவன் உண்டை வில்லால் அடித்துக் கொல்வானே யாகில் அவனுக்கும் தளபதிப் பட்டம் கொடுப்பார் போலிருக்கிறதே.

நாக:—இருக்கட்டும் அவனை அரச சபையில் பட்ட மளிப்பு விழாவின் போது பார்த்துக் கொள்கிறேன் "உண்மையில்லாத உலகம்" (போகிறான்:)

---

## காட்சி 9.

இடம்: விஜயபுரி அரசவை. காலம்: முற்பகல்

(வெற்றிவீரமன்னர் அரியாசனத்திருக்க மற்றவர்கள் முறையே வீற்றிருக்கின்றனர் நன்கு அலங்கரிக்கப்பட்ட மணி மண்டபம்)

வெற்றி:—(எழுந்து நின்று) அன்பு மிக்க அமைச்சர்களே! ஆற்றல் மிக்க சேனாதிபதிகளே! ஆதரவு மிக்க குடிமகா ஜனங்களே! அனைவருக்கும் என் நன்றி.

இன்று இந்த விசேட வைப்வ விழாக் கொண்டாட்டம் நடைபெற வேண்டியதின் அவசியம பற்றி விபரமாகக் கூற வேண்டியது எனது முதற் கடமை.

கேளுங்கள்! கடந்த ஞாயிறன்று நான் வேட்டையாடக் காட்டுக்குச் சென்றிருந்தபோது மகா வலிமை மிக்க சிங்கம் ஒன்று உக்ரத்தோடு சீறி என்மேல் பாயவந்த தருணம் எதிர்பாராத விதமாகத் தோன்றி பயங்கரமாகப் பாயவந்த சிங்கத்தைச் சிறிதும் அச்சமின்றி கொன்று வீழ்த்தி எனக்கு மறு பிறவி தந்தார் என்றே சொல்ல வேண்டும். அத்தகைய மகோன்னத பேருபகாரம் புரிந்த இவரை, தனக்கென வாழா பிறர்க்குதவியாளரை, வீரமிக்க விஜயேந்திரத் தோன்றலை இந்த விஜயபுரி நாட்டின் "தளபதி" யாக என் சார்பாகவும், அமைச்சர்கள் சார்பாகவும், சேனாதிபதிகளின் சார்—

நாக:—(திடீரென எழுந்து) வேந்தர் சமுகத்தில் ஒரு விண்ணப்பம்.

வெற்றி :—என்ன நாகநாதரே?

நாக :—விஜயேந்திரனைத் தாங்கள் சேனாதிபதியாக நியமிப்பதை இதுவரை சேனாதிபதியாக இருந்துவரும் "தளபதி" நாகநாதன் பலமாக ஆட்சேபிக்கிறேன்.

வெற்றி :—காரணம்?

நாக :—அரசே! ஒருநாட்டின் பிரதம தளபதியாக இருக்க வேண்டுமானால், ஒருசிங்கத்தையோ அல்லது பலசிங்கங்களையோ கொன்றால்மட்டும் போதாது. விடிந்தெழுந்தால் வேடன் ஒருவன் சாதாரணமாகச் செய்யும் தனுர்ப்பழக்க வேலை சிங்கங்களையும் புலிகளையும் சேர வேட்டையாடுவது. ஆகவே அந்த வேடன் ஒரு சேனையை நடத்திச் சென்று பகையரசரைப் பரக்க அடித்துக் கொல்லும் பக்குவப்பண்புமிக்க படைத் தலைவனாக முடியுமோ?

இரத கஜதுரக பதாதி பயிற்சிகளில் தேர்ச்சி பெற்று, தேர்ச்சிபெற்றுவிட்ட தோடல்லாமல் யுத்தங்களில் சைனியங்களை அணிவகுத்துச் சென்று விரோதிகளை வென்று ஜெயக் கொடி நாட்டும் ஒரு சுத்த வீரனைத் தான் சேனைத்தலைவன் என்று உலகம் ஒப்புக்கொள்ளும். அப்படியிருக்க மன்னா! எங்கள் பரம்பரையில் என் வரையிலும் இருபத்தேழு தலைமுறையாய் சேனைத் தலைவர்களாக இருந்துவந்துள்ளோம் என்பது தாங்களும் அறிந்ததே.

ஆல :—நாங்களும் நன்குணர்ந்ததே.

நாக :—இந்த நாட்டில் ஏற்பட்ட எத்தனையோ புரட்சிகளையும் கலகங்களையும் அடக்கியிருக்கிறேன். அப்படியிருக்க எங்கிருந்தோ இடைக்காலத்தில் காளான் போல வந்த ஒருவனுக்கு எனது ஸ்தானத்தைக் கொடுப்பது வருந்தத்தக்கது மறுக்கத்தக்கது.

அசம்பாவிதமாக ஒரு சிங்கத்தை அம்பெய்து கொன்றதானது ஒரு நாட்டின் சேனைத்தலைவனின் வீரத்தை அளக்கும் அளவுகோலாகாது. ஆகையால்

அரசே! இந்தச் சபையில் தங்கள் முன்னிலையிலேயே யார் வீரத்தில் சிறந்தவர்கள் என்பதை பரிசோதித்து பிறகு, அந்த முதல் சேனதிபதி பட்டத்தை தாராளமாகவெற்றிபெற்றவருக்குக் கொடுக்கலாம். இதுதான் நீதியும் நேர்மையுமாகும் என்பது எனது வேண்டுகோள்.

வெற்றி :—நாகநாதரே! யார் எந்தப் பதவியில் இருந்தால் என்ன? நாடு க்ஷேமமுற்று குறைவின்றியிருக்க வேண்டும் என்பதுதான்நம் எல்லோரின் நோக்கம். மேலும் இந்த விசேட சுபதினத்தில் விவகாரம் எதற்கு?

நாக :—"விவகாரம்"! எங்கள் வம்சத்திற்கே செய்கிறீர் பெரிய அபகாரம்.

வெற்றி :—நாளைப் பார்ப்போமே இன்றுபோகட்டும்.

விஜ :—நாளை ஏன் அரசே! இன்றே ஆகட்டும்.

வெற்றி :—சரி! உங்களிஷ்டப்படியே நடக்கட்டும்.

(விஜயேந்திரன் நாகநாதன் கத்திச்சண்டை நடந்து, நாகநாதன் தோல்வியுறுகிறன்.)

நாக :—எதிர்பாராமல் நேர்ந்த இந்த அவமானத்தை என்னல் தாங்கமுடியவில்லை (அயர்ந்து உட்காருகிறன்).

வெற்றி :—நாளை வர இருந்த அவமானத்தை வற்புறுத்தி நாகநாதர் இன்றே சம்பாதித்துக்கொண்டார்.

ஆல :—நாகநாதரின் உள்ளம் உடைந்திருந்தது அதனல் ஏற்பட்ட பலவீனம் அவருக்கு. இல்லாவிட்டால் சரிசமமாகவே முடிவு ஏற்பட்டிருக்கும்.

வெற்றி :—இனி எந்தவித ஆட்சேபமுமின்றி தாராளமாக விஜயேந்திரனை முதல் தளபதியாக ஒப்புக்கொள்வீர்கள் அல்லவா?

கூட்டம் :—ஆம் ஆம். (ஆமோதித்தல்)

வெற்றி :—முறையே சேனதிபதிகளின் சார்பாகவும் குடிமகாஜனங்களின்சார்பாகவும் வீரவிஜயேந்

திரனை "பிரதம தளபதி" யாக மனப்பூர்வமாய், அதிகார ரீதிப்படி நியமித்து "வீரவாள்" பரிசு வழங்குகிறோம்.

விஜ :—(வீரவாள் பெற்றுமண்டியிட்டுவணங்கி நின்று) மாட்சிமை தங்கிய மன்னர்பிரானுக்கும், மதிப்பிற்குரிய இளவரசருக்கும், மதியிற்சிறந்த மந்திரிகளுக்கும், வலிமை மிகக சேனைத்தலைவர்களுக்கும், வணக்கத்திற்குரிய தேசமகாஜனங்களுக்கும் எனது தாழ்மையான நன்றி கலந்த வணக்கம்!

இன்றுமுதல் நான் இந்தத் "தளபதிப்" பொறுப்பையேற்று, உண்மையாகவும் நேர்மையாகவும், நீதியாகவும், சுறுசுறுப்பாகவும் இந்நாட்டுக்குச் சேவை செய்வேன் என்று என் மனப்பூர்வமாக உறுதி கூறுகிறேன்.

கூட்டம் :—வெற்றிவீர மகாராஜா! வாழ்க!
விஜயேந்திர தளபதி! வாழ்க!

ஆலகால :—எங்கே பரத நாட்டியம் நடக்கட்டும்.

(நடனத்துடன் சபை கலைகிறது)

---

## காட்சி 10

இடம் :—நாகநாதன் தனி அறை. காலம் :—காலை

(நாகநாதன் ஆலோசனை செய்து நடந்து கொண்டேஒரு புறமாக வந்து)

நாகநாதன் :—உண்மையில்லாத உலகம்.

ஆலகாலன் :—(எதிர்ப்புறம் வந்து கொண்டே) உணரும் காலம் வரும்.

நாக :—காலம் வரும் வரும் என்று காத்திருந்து கையைக் கட்டிக் கொண்டு கண்மூடிக் கிடப்பவரின் காசினி வாழ்வே மண்மூடிப் போகுமென்பது திண்ணம்.

ஆல :—எது குறித்துக் கூறுகிறாய் இவ்வண்ணம்?

நாக :—அதுவா ! அமைச்சர் ஆலகாலருக்கும் தளபதி நாக நாதனுக்கும் இனி இங்கென்ன வேலை ?

ஆல :—ஏன் வந்து விட்டதா ஓலை.

நாக :—ஓலை மட்டுமல்ல, உமது வாழ்வுக்கே உலை.

ஆல :—உளருதே.

நாக :—உண்மையைச் சொல்வது உளறல். உயர்ந்தோம் என்றெண்ணி உவகை யடையாதீர். உதைத்துத் தள்ள ஒருவன் காத்திருக்கிறுன் என்பதை உணர்த்து வதா உளறல் ? உலகம் தெரியாத கிணற்றுத் தவளே உமக்கென்ன தெரியும் ?

ஆல :—உன்மத்தம் கொண்டாயா என்ன ? நாகநாதா ? வீண் வார்த்தை வேண்டாம் விளக்கம் தேவை.

நாக :—விளக்கம் வரும்விபரீதத்தைத் தடுக்கத் தேவை. என் வார்த்தைக்கல்ல. அமைச்சரே ! இல்லேஇல்லை. வருங்கால ஆண்டியே ! அன்று ஒருவனை அரசரும் நீரும் நானும் அழைத்து வந்தோமே

ஆல :—ஆம் விஜயேந்திரன் அவனுக்கென்ன ?

நாக :—அவனுக்கென்ன, அவன் இருக்கிறுன் நம்மை அடியோடு குழிதோண்டிப் புதைக்க. அவன் வருகைக்குப் பின் நம் வாழ்வு வளைந்து விட்டதே அது தெரியுமா உமக்கு ? எங்கேயோ கிடந்த பரதேசிப் பயலுக்குப் பாராளு மன்றத்தில் பதவி கிடைத்தால் .... ?

ஆல :—பிறன் வாழ்வைக் கண்டு பொறுமுவதே உன் பிறவிக் குணமா ?

நாக :—பிறன் ஏற ஏணியாக இருப்பதுதான் உமது எண்ணமா ? ஆய்ந்து பாராத காரணத்தால் ஏமாந்தோம். நமது ஏமாற்றத்தில் ஏற்றங்காணப் பார்க்கிறுன் எத்தன் விஜயேந்திரன். ஆலகாலரே ! பாம்புக் குட்டிக்குப் பரிவு காட்டுகிறீர். மாற்றானுக்கு இடங் கொடுத்தோம் மாட்டிக் கொண்டோம் மீளவகையின்றி, அமைச்சரே ! நினைத்துப்பாரும் ! " விஜயேந்

திரன்" அந்தச் சொல் அரசரின் வாய்விட்டு அகல்வ துண்டா?

பூவிற்றோம் அன்று, புல்விற்கிறோம் இன்று, நாளை புலால் விற்கவும் நேரும் இப்போதே இவனைப் பொசுக்காவிட்டால்.

ஆல :—(யோசித்து) உண்மை! நாகநாதரே! இதற்கென்ன வழி?

நாக :—வழி என்னவழி, வஞ்சனை தான் வழி. ஆலகாலரே! கரைப்பார் கரைத்தால்....?

ஆல :—கல்லும் கரையத்தான் செய்யும்.

நாக :—அரசர் உள்ளம் தீபம் உமது பேச்சு தூபம். விஜயேந்திரன் உமது குறி. அரசரைக் கரைத்து அவனைப் போர் முனைக்கு அனுப்பச் செய்யுங்கள்.

ஆல :—யார் மேல்?

நாக :—வசந்தபுரி மன்னன் இராஜராஜன் மீது.

ஆல :—பேரரசன் இராஜராஜன் மீது அவனது சிற்றரசன் வெற்றிவீரன் பல தோல்விகளுக்குப் பின்னும் படையெடுப்பதா?

நாக :—ஆம்! அதைத்தவிர வேறு வழியில்லை. அவனை ஒழிக்க இதை மட்டும் நீர் முடித்துவிட்டால் மற்றவை என் பொறுப்பு வெற்றி கிட்டும் வரை.

ஆல :—அப்படி ஆனல் சரி.

நாக :—உண்மையில்லாத உலகம்.

ஆல :—உணரும் காலம் வரும். (போகின்றனர்)

---

## காட்சி 11

இடம் :—விஜயபுரி அரசசபை. காலம் :—பகல்.

இருப்போர் :—வெற்றிவீரர்; ஆலகாலன் நாகநாதன், சபையோர்.

விஜயேந்திரன் :—(வந்து வணங்கி) மங்களம் மங்களம் மாமன்னவா! மண்ணைக் கட்டியாளும் திண்ணிய

வேந்தரெல்லாம் மண்டியிட்டனர். இன்றைய மன்னர்க்கெல்லாம் தங்கள் பெயர் ஓர் அச்சக்குறி சென்ற விடமெங்கும் வெற்றிமேல் வெற்றி.

வெற்றி :—விஜயேந்திரா! "வெற்றி" வீரத்திற்குப் பரிசு. வீரம் உன்னால் பெருமையடைகிறது. உன் ஆசனத்தில் அமர்.

ஆல :—மன்னரே! இந்த வெற்றியிலேயே மகிழ்ந்து விடுவதற்கில்லை.

வெற்றி :—என்ன?

ஆல :—ஆம்! பாயப்பதுங்கி நிற்கும் புலிக்கும் தப்பினால் தான் முழுவெற்றி கண்டதாக முடியும்.

வெற்றி :—ஆலகாலரே! இதென்ன உமக்குக்கிலி.

ஆல :—மன்னரே! வசந்தபுரி இராஜராஜன் எந்த நேரமும் நமமீது படையெடுக்கலாம்.

வெற்றி :—ஏன் கப்பத் தொகைதான் கட்டிவருகிறாரே.

ஆல :—வேந்தே! வீரத்தின் உருவம் விஜயேந்திரனே நமது தளபதியாக இருக்கையில் மாற்றானுக்குக் கப்பமா?

நாக :—மகிதலந்தான் ஒப்புமா?

வெற்றி :—அதற்கு....?

நாக :—இந்த அவமானம் ஏன் என்றுதான் இம்முறை கட்டவில்லை கப்பம்.

வெற்றி :—வலுச்சண்டைக் கிழுப்பதா வன்மை மிக்க வசந்த புரியனை.

ஆல :—திக்விஜய ஜெய விஜயேந்திரனின் வீரத்திற்கு மற்று மோர் உரைகல்.

வெற்றி :—விஜயேந்திரா!

விஜயே :—இதோ புறப்பட்டு விட்டேன் வேந்தே! போர் முரசு முழங்கட்டும்.

வெற்றி :—விஜயேந்திரா ! இராஜராஜன் இணையற்ற வீரன்.

ஆல :—நினைத்தாலே நெஞ்சுகலங்கும் ரணசூரன்.

விஜ :—இருக்கலாம் தன்னுயிரைச் சர்க்கரையென மதிக்கும் சக்தியற்ற கோழைகளுக்கு. வீரர் வழிவந்த நான் வீணனல்ல. வேந்தே சூள் (சபதம்) உரைக்கிறேன் இதோ ஈன்று புறந்தந்த என் தாய்மேல்ஆணை, எனது தாய்நாட்டின் மேல் ஆணை, மனித இனத்தின் மாயாத உழைப்பின்மேல் ஆணை. வசந்த புரி சென்று இராஜராஜனை முறியடித்து சிறைபிடிக்கும் வரைஉரையிலிடேன் என்வாளை.

வெற்றி:—மகிழ்ச்சியோடுஎதிர்பார்க்கிறேன்அந்த மா பெரும் நன்னாளை.

(திரும்பி) ஏய் ! எனதுமைந்தன் வீரகுமாரனை அழைத்துவா !

(ஏவலன் வணங்கிச் செல்லவும்)

நாகநாதரே ! நீரும் சென்று திறமையாக வழி காட்டி அணிவகுத்துநின்று ஜெயம்பெற்று வாரும் !

நாக :—(திடீரென்று பதறி) இம்-ம்-ம்-நான் சரி....

ஆல —வேந்தே ! நமது விஜயேந்திரனும் இளவரசரும் வெளிநாடு செல்வதால் உள்நாட்டுப் பாதுகாப்புக்கு ஒரு தளபதி வேண்டும். ஆகவே நாகநாதரை இங்கே இருக்கச் செய்வது நல்லதென்பது எனது அபிப் பிராயம்.

வெற்றி :—ஆம் அதுவும் சரிதான்.

வீரகுமாரன் :—(வந்து வணஙகவும்.)

வெற்றி :—அப்பா ! வீரகுமாரா ! இன்று நீ உனது உற்ற சகோதரனும் எனது பற்றுதலுக்கு உரியவனும் தளகர்த்தனுமான விஜயேந்திரனுடன் வசந்தநாடு சென்று மன்னன் இராஜராஜக்ரீடனைவென்று ஜெயம் பெற்று மீள்வாயாக !

இதுவே விஜயேந்திரனது விருப்பமும் எனது கட்டளையும் அழைத்த விபரமும்.

வீர :—தந்தையே! வீரத்தில் நானும் சளைத்தவனல்ல தருக்கன் தலைக்கனத்தை இறக்காமல் நாடு திரும்பேன்.

(இருவரும் வணங்கிச் செல்கின்றனர்.)

——

## காட்சி 12

இடம் :—வசந்த நாட்டு, யுத்தப்பாசறை. காலம் :—பிற்பகல்

(ஒரு ஆசனத்தில் வீரகுமாரன் அமர்ந்திருக்க இராஜராஜ க்ரீட மன்னனைக் கைது செய்துஅழைத்து வந்து.)

விஜயேந்திரன் :—எவராலும் எதிர்க்க முடியாதென்று இறுமாந்திருந்த இராஜராஜன் இப்போது தங்களின் தாசதாசன் இளவரசே.

வீர :—இராஜராஜனே! இறங்கியதா உனது தலைக்கனம் அல்லது கல் சுமக்க ஆசையா?

இராஜராஜன் :—நாதியற்றுப் போன என்னை நீதியற்ற முறையில் ஏசிப்பரிகசிப்பது நல்லதல்ல.

விஜ :—இராஜராஜனே! இப்போதும் ஒன்றுங் கெட்டுவிடவில்லை. கப்பம் கட்டக் கட்டுப்பட்டால் மீண்டும் இந்த நாட்டை நீரே ஆளலாம். உமது கருத்து என்ன?

இராஜ :—உன் வீரத்தைப் பாராட்டுகிறேன். ஆனல் உனது அகந்தை தொனிக்கும் வார்த்தை எனக்கு வேம்பு.

வீர :—பேசாதே வீம்பு.

விஜயே :—என்ன? கப்பம் கட்டச் சம்மதமா?

இரரஜ :—மானம் பெரிது வாழ்வு எமக்கு வெல்லமல்ல நாயினும் கீழாய் நலிந்தாலும் தாயினும் மேலாய் என் மானம் வாழும்.

விஜ :—இது........

இராஜ :—அசைக்க முடியாத உறுதி.

விஜயே :—இருந்திருக்கலாம். அது ஒரு காலம்.

இராஜ :—"காலம்" ஆம்! காலம் என்பது கட்டுக்கு அடங்காதது அது அதன் போக்கில் கணத்துக்குக் கணம் மாறும் இயல்புடையது. அதில் ஆச்சரியகரமான மாறுதல்கள் ஏற்பட்டுக்கொண்டே தான் இருக்கும். இந்தக் காலச் சுழற்சிக்கு யாரும்விதிவிலக்கல்ல. வெற்றியும் தோல்வியும் வேந்தர்க்குச் சகஜம்.

நேற்றுப் பொழுது வரை நெடுங்காலமாக தோற்றுப் பகுதி கட்டி தொழுது படிந்திருந்து இந்த வேற்றுனின் பின்வந்து வீராப்புப் பேசி நிற்கும் ஏ வெற்றி வீரன் மைந்தனே! உன்னை அறிவேன் என்னுடன் போராடி ஏழு முறை புறமுதுகிட்டோடியுள்ள உன் அப்பனையும் அறிவேன்.

ஜெயம் பெற்று விட்டோம் என்ற மமதையால் சிற்றுரை யெதுவும் கூறி செருக்கடையாதே. பயம் என்பதையே அறியாத பாரதத் தமிழ்வீர பகதூர் இராஜராஜக்ரீடன் யான்தான் என்பதை நீ இதற்குள் மறந்திருக்க இயலாது.

இறுதியாகக் கூறுகிறேன். எனக்கு இப்போதைய இந்த நிலைமையைக் காட்டிலும் ஆபத்தானதும் அநாதரவானதுமான நிலைமை இனிவேறொன்றும் ஏற்பட முடியாது. ஆனால் இதையும் விட அபாயமானதும் ஏழ்மையானதுமான ஒரு விபத்து நேரிட்டாலும், மீந்துள்ள எனது உயிரையேனும் கொடுப்பேனேயல்லாமல், ஒருவனுக்கு அடங்கி பாதிச் செல்லாக் காசேனும் பகுதி யெனும் பேரில் கொடுப்பேன் என்று அந்த ஈசனும் இருதயத்தின் சிறு பகுதியிலேனும் எண்ண வேண்டியதில்லை.

வாழ்ந்தால் மண்டலம் யாவையும் தன்னுட் கொண்ட வசந்த நாட்டின் சாம்ராஜ்ய மகா சக்ராதிபதியாக மணிமுடி தாங்கி வாழ்வேன். இன்றேல்

மாற்றானின் கூர்வேல் முனை, என்மார்பிற் பாயத் தாங்கி மட்டற்ற மகிழ்ச்சியோடு மாள்வேன்.

கூலிக்கு வாளேந்தும் வேலைக்காரனை, விஜயேந்த்ரா! கூர்ந்து கவனித்துப்பார்! இதனால் நீ அடையும் இலாபம் என்ன?

கொலையும் பழியும் கொடும் பாபமும் ஏற்று, அலையும் பதவியான அடிமைத் "தளபதி"யே யன்றி அகிலத் "தலபதி" யாகப் போவதில்லை.

வீர:—விஜயேந்த்ரா! பிரித்தாளும் சூழ்ச்சிப் படலம் அரங்கேற்றம்.

விஜ:—போதும்! நிறுத்து உன் புன்மதி விரிவுரையை. வீரர் வரிசையில் இடம் பெற்றிருந்த ஒருவன் என்பதற்காகபேச அனுமதித்தோம். ஒரு வேளை நீ குற்றத்தையுணர்ந்து திருந்தலாம்என்றும், மன்னிப்பு உன் மனதை மாற்றும் என்றும் நினைத்தோம். ஆனால் குடிக்க முடியாத பாலைக் கொட்டிக் கவிழ்ப்பது போல, முடியாமல் முடியைப் பறிகொடுத்து மடியப் போகும் போதும் எங்களிடையே பிரிவினைத் தீயை மூட்டிவிடப் பார்க்கிறாய். சரித்திர ஏட்டில் இது சாதாரண நிகழ்ச்சி. சாம்ராஜ்யத்தின் அழிவுச் சாம்பலில் முளைக்கும் வஞ்சனைப் பூண்டு இது. தளிர்த்துப் படரும் வரை தழைத்து வளர விடமாட்டேன்.

வீர:—போராசைப் பித்தா! சேனபலத்தால் ஜெகத்தைக் கட்டியாண்ட மானவமானமறியா மடையர்களின் வாழ்க்கைப்பகுதியின்இறுதிஅத்தியாயம் இதுதான்.

சிரங்குனிந்து திறை கொடுக்கச் சித்தமா? இல்லை, சிறை செல்ல ஆயத்தமா?

இராஜ:—வேண்டாம் வீண்பிதற்றல். தாங்கமுடியாத பாரத்தை யேற்றப்பட்ட வைரத் தூணது பிளந்து விழுமேயல்லாது வளைந்து தளர்வது முண்டோ?

வீர:—தளராது தான். அத்தூண் உயிரற்ற, உணர்வற்ற கல் (காட்டி) இதுவும் அது தானே? (சிரிப்பு)

இராஜ :—(சினந்து) மதியிழந்த மடையா! உற்ற விடத்தில் உயிர் வழங்கும் தன்மையர் பற்றலரைக் கண்டால் பணிவரோ?

வீர :—பணியார். குடை நிழலிருந்து குஞ்சரம் ஊர்ந் தோர் நடைமெலிந்து ஓர் ஊர் நண்ணினும் நண்ணு வர் இது (காட்டி) பிரத்தியட்சம்.

இராஜ :—உடைமையும் வறுமையும் ஒரு வழி நில்லா. குன் றத்தனையிரு நிதியைப் படைத்தோர் அன்றைப் பகலே அழியினும் அழிவர்.

வீர :—ஆம்! இதை நீ இதற்கு முன்னரே அறிந்து நடந் திருந்தால் இந்த உலகநீதி மூதுரைப் பாடல்களை, உபாத்தியாயர் பீடத்தில் என்னை இருத்தி மாணவன் போல் நீ நின்று இப்படிப் பள்ளிப் பாடங்களை ஒப்பு விக்கும் நிலை நேர்ந்திருக்காது. ஊருக்கு உபதேசம் செய்துதான் திருந்தாத உன் போன்ற யாருக்கும் கெட்ட பிறகு எட்டுப் புத்தி வருவது இயற்கை. இயற்கையிலிருந்து நீ மட்டும் எப்படித் தப்ப முடியும்?

இராஜ :—முடியாது தான் (நிமிர்ந்து) போர் முறை மீறிய புல்லனே! கேள்! யுத்தம் தொடுக்கும் நாளையும் இடத்தையும் முன்கூட்டியே எதிரிக்கு அறிவிப்ப துடன், அந்நாட்டிலுள்ள பசுக்கள், சிசுக்கள், பெண் கள், வயோதிகர்கள், வியாதியஸ்தர்கள் அறநெறிப் பட்டவர்கள் ஆகிய அனைவரும்போர்செய்யு மிடத்தை விட்டுப் போய்விட வேண்டுமெனப் பிரகடனம் செய்து, குறித்த காலத்தில் சமர் தொடங்கு வது உத்தமத் தமிழர் வகுத்துள்ள யுத்த தர்மம்.

அப்படியிருக்கஅதற்கு நேர்மாறாக எனக்கு எந்த விதமான முன்னறிக்கையும் எச்சரிக்கையு மின்றி இருட்டு வீட்டில் நுழையும் திருட்டு நாய் போன்று திடீரெனப் புகுந்து அதர்ம யுத்தம் புரிந்து அகப்பட்டதைச் சுருட்டி அகங்கரித்து நிற்கும் அக்

ரமனுன நீயும் வீரனென வெட்கமில்லாமல் விருது கூறி நிற்கிருய்.

விஜ:—எட்டாத பழத்துக்குக் கொட்டாவி விட்டுக் கிட்டாதபோது இந்தப் பழம் புளிக்கும் என்னும் குள்ள நரிக் கொள்கையுடையவனே! கையில் பொருள் இல்லாத போது தரும நியாயமும், ஆற்ற முடியாத போது அஹிம்சையும் பேசும் ஜெக ஜாலப் புறட்டனே! கண்கெட்ட பிறகா சூரிய நமஸ்காரம்?

எதிரிக்கு முன்னறிவிப்பாக நீ விடுத்த போர்ப் பிரகடனங்கள் எத்தனை? நீ தொடுத்த அறப்போர் எத்தனை? உன் போர் முனையில் இன்றுபோய் நாளை வா எத்தனை?

தருமமாம், போர்முறையாம், உனக்கு சரி யென்றுபட்ட திடீர்த்தாக்குதல்கள்தேடித்தந்த வெற்றி தானே நேற்றுவரை நீ அடைந்தவை. அதே முறையை நாங்கள் கையாளும் போது மட்டும் குற்றம் என்று கூக்குரலிடுகிருய். எங்களுக்கும் போர் முறை தெரியும். ஆனுல் உனக்கு புத்தி புகட்டத் தான் நீ சென்ற வழியில் நாங்களும் நுழைந்தோம். அதை மாறுபட்டதாகக் காணும் உன் நிலைமைக்குப் பரிதாபப் படுகிறேன்.

கடைசி முறையாகக் கேட்கிறேன்; பகுதிப் பணம் செலுத்திப் பழயபடி பாராள ஆசையா அல்லது பாதாள சிறை செல்ல ஆசையா?

இராஜ:—தன்மானமுள்ள தமிழன் மானம் பறிபோவதை மரணத்துக்கு ஒப்பாக மதிக்கிருன். "மரணம்" என்பது மனித வாழ்க்கையில் ஒரே ஒரு தடவைதான் சம்பவிக்கும். ஆனுல் மானம இழக்கத் துணிந்து வாழும் மானிடப் பிணங்கள் பல தடவை ஏன் மானங்கெட நேரும் ஒவ்வொரு நொடிப்பொழுதும் மரணமடைந்து கொண்டேயிருக்கிருர்கள் அத்தகைய மனிதப் பிரேதங்களாக நான் ஒரு

போதும் வாழ விரும்பேன் உ-ம்-ம்! சிறைச்சாலைக் கல்ல சிரச்சேதத்துக்கும் தயார்.

வீர :—சீற்றம் ஆற்றற் குறைவின் அறிகுறி. ஆற்ற மாட்டாதவர்கள் அலறித்துடிப்பது அநுபவந் தானே. இருக்கட்டும்! (திரும்பி) விஜயேந்திரா!

விஜ :—காராக்கிரஹம் புகும் கைதிக்கு நேராய்க் கிரமம் போதித்தால் அது எருது தான்.

வீர :—நமது உறவினரான இராஜேந்திரரே இந்த நாட்டை ஆண்டு வரட்டும் தற்காலீகமாக. நீர் வசந்தபுரி சென்று முடி சூட்டிவாரும்.

(திரும்பி இராஜராஜனைச் சுட்டிக் காட்டி)

வலிமை மிக்கோம் என்ற மமதையால் விரும்பாத நாட்டைத் தன் ஆட்சிக்கு உட்படுத்த எண்ணும் வம்பர்க்கெல்லாம் இது தான் கதி. "கப்பம்" என்ற பெயரால் துணை நாட்டைக் கருவறுக்கும் கயவர்கட்கெல்லாம் கத்தி முனை பாடங்கற்பிக்கட்டும். (திரும்பி) கொண்டு போங்கள் இவனைச் சிறைச் சாலைக்கு.

(கொண்டு போகவும்)

அதியுக்தா! விரைந்தோடு! மன்னர்பிரானுக்கு நமது வெற்றியைத் தெரிவி!

அதியுக்தன் :—ஆக்ஞை. (வணங்கிச் செல்கிறான்)

---

## காட்சி 13

இடம் : ஆலகாலன் விடுதி. காலம் : பகல்

(ஆலகாலனும் நாகநாதனும் பேசிக் கொண்டிருக்கின்றனர்.)

நாகநாதன் :—இதிலென்ன சந்தேகம்? விஜயேந்திரன் வீழ்ந்தேயிருப்பான். இராஜராஜன் வகுக்கும் போர்க்களம் ஓர் படுகுழி அந்தப் படுகுழியில் பாய்ந்து மாய்ந்து போயிருக்கும் அந்த விஜயேந்திர யானை

என்பதற்கு ஐயமே வேண்டாம். பாம்பின் வாய்ப் பட்ட தேரையும் கடந்து போன காலமும் மீளு மானல் விஜயேந்திரனும் மீளுவான்.

ஆல :—ஆம் ஆம்! ஒன்ரு இரண்டா? அத்தனை சூழ்ச்சி களில் எதிலாவது ஒன்றில் சிக்கித்தானே ஆக வேண்டும்.

அதியுக்தன் :—(வந்து புகுந்து அவசரமாக) வந்தது அனர்த் தம். வெற்றி கண்டான் விஜயேந்திரன்.

நாக :—நம் எண்ணத்திலே மண்.

ஆல :—நமது திட்டங்கள்?

அதி :—நிறைவேற்ற முடியவில்லை ப்ரபு! விஜயேந்திரனை விட்டு வீரகுமாரன் நீங்கவேயில்லை. விஜயேந்திரன் வீரகுமாரனைப் பிரிந்து விலகவேயில்லை. விஜயேந்தி ரனின் மார்பிற் பாய்ச்ச தாங்கள் கொடுத்தனுப்பி யிருந்த "கூர்வாள்" இதோ துருவேறிப் போயி ருக்கிறது பாருங்கள்! (காட்டுகிருன்)

நாக :—போர்க்களத்திலாவது........?

அதி :—அங்குந் தோல்விதான் நமக்கு. போர்முனைக்கு நமது ஐந்தாம் படையை அனுப்பவேயில்லை.

ஆல :—பட்டபாடெல்லாம் பாழ்தானு?

நாக :—கெட்டு விடவில்லை யின்னும், அற்று விடவில்லை யென்மூளை. ஆலகாலரே! ஆயாசப்படாதீர்! அதி யுக்தா! அஞ்சாதே! துணிவுதான் நமக்குத் துணை. கொண்டுவா ஓலையும் எழுதுகோலும்.

ஆல :—(தீனதொனியில் நடுங்கி) நாகநாதரே!

நாக :—நடுங்காதீர்! ஓலையில் அரசரின் கையொப்பம் நாம் விடுக்கும் செய்தி.

ஆல :—இதில் ஆபத்தொன்றுமில்லையே?

நாக :—உண்டு, நமக்கல்ல விஜயேந்திரனுக்கு (ஓலையெழுதல்) இதுவெறும் ஓலையல்ல விஜயேந்திரனுக்கு சாவோலை

(ஓலையை ஆலகாலரிடம் கொடுத்து) இதில் தந்திரமாக அரசர் கையொப்பம் போல போட்டு நமது அந்த ரங்கத் தூதனிடம் கொடுத்து மேற்கொண்டு விபரங் களைக் கூறி அனுப்ப வேண்டும்.

(காதில் இரகசியம் சொல்லல்)

ஆல :—(வாங்கிப் பார்த்து) சரி அப்படியே செய்வோம். அந்த இராஜராஜப் பொறியிலே விஜயேந்திர எலி விழவில்லை. இந்தப் பொறி எமப்பொறி. இதில் அகப்பட்டே தீரும். (திரும்பி) அதியுக்தா! (அதியுக் தன் காதில் இரகசியம் சொல்லி) நாங்கள் அரசவை செல்கிறோம். நீ பின்னே அங்கே வந்து சேர்! ஜாக்கிரதை.

(நாகநாதனும் அதியுக்தனும் இரகசியம் பேசிய பிறகு)

நாக :—சாமர்த்தியமாக நடக்க வேண்டும்.

அதி :—ஆகட்டும்! அங்கே பாருங்கள் என்வேலையை.

(போகிறார்கள்)

——

## காட்சி 14

இடம் : சந்திரபுரி, நந்தவனம், காலம் : முற்பகல்

(இளவரசி சந்திராங்கனையும் தோழிகளும் பாடி விளையாடி முடியும் தருணம்.)

தாதி :—(வந்து வணங்கி) அம்மணி! இங்குள்ள தோழிகள் தாதிகள் அனைவரையும் அரசர் அரண்மனைக்கு அழைத்துவரச் சொன்னார் அவசரமாக.

சந்திராங்கனை :—சரி! வனிதாமணி! நீ மட்டும் இங்கிரு!

தாதி :— வனிதாவையுந்தான்.

சந்திரா: —எல்லோரையுமா?

தாதி :—ஆம் இளவரசி.

சந்திரா :—அப்படியானல் வனிதாமணி! நீ போய் சீக்கிரம் திரும்பிவந்து சேர்! என்னல் தனியாயிருக்க முடியாது.

வனிதா :—சரி! (எல்லோரும் போகவும்)

சந்திரா :—(மலர்களைப் பறித்தும் பார்த்தும்) மணம் சிந்தும் மலரே! நீயும் வாழ்கிருய் வகையறியாது, நானும் வாழ்கிறேன் வளமில்லாது. பரமனுக்கும் சூட்டப் படுகிருய், பலி ஆட்டின் கழுத்திலும் கிடக்கிருய். அதே போலத்தான் பெண்குலமும். விரும்பிய வரனை அடைந்தாருமுண்டு. விதியிணைத்த வாலிபர்களை அடைவதுமுணடு, படுகிழவனை மணந்து பாழானவர்களுமுண்டு. மலரும் மங்கையும் மனித இனத்தின் விளையாட்டுக் கருவிகள்.

(பாட்டு பாடி முடியவும்)

(சோர்வுடன்) ஏதென்னவிந்தை, உலகத்திலே நான் ஒரு பெண்ணுய்ப் பிறந்த விந்தை, பருவத்தே பயிர்செய் என்ற பழமொழியை சிறிதும் மனதுட் கொள்ளவில்லையே என் தந்தை.

அந்தோ! தாதித்தொழில் புரியும் தையலர்கள் இங்கிருந்து தனது பர்த்தா புத்திரர் பெண் என்றெல்லாம் பேசிக் கொள்ளும் போது என் மனதிலுண்டாகும் லஜ்ஜைக்கும துன்பத்துக்கும் அளவுமுண்டோ!

சகல சம்பத்துக்களுக்கும் இருப்பிடமான தார் வேந்தரின் தவமகளாக ஜனித்தும் எனது இளமைப் பருவ வாணுள் வீண்நாளாகக் கழிவது என் ஜன்மாந்தர கன்மவினையோ? தன்மார்த்தசொரூபியான சர்வேஸ்வரனின் சோதனையோ?

உன்னதமிக்க அரசகுடும்பத்திலே உதித்தும் எவ்வளவோ செல்வமாக வளர்ந்தும் என்ன பிரயோஜனம்! தாயற்றசேயின் தவிப்பு என்னும் ஏக்கத்தை எனக்கு இல்லாது செய்துவிட வேண்டுமென்று எண்ணி என் தந்தை எனக்குஎல்லாவித சௌகரியங்

களைச் செய்தும் காலத்தில் மணவினை முடித்துவைக் காத காரணத்தால் அது இயலாதகாரியமாக இருப் பதை அவர் அறியார்.

ஏதோ என் பிதா கொஞ்ச நாட்களாக, சிறு சிறுவார்த்தைகளால் யாரோ ஒரு அரசருக்கு என்னை மணமுடிப்பதாகக் கூறி' வருகிருர். அந்த மன்னர் இன்னர் இனியார் என்றுகூட எனக்குத் தெரிய வில்லை, தெரியும்படி செய்யவுமில்லை.

திடீரென ஒருநாள் எனது தந்தை மணவிஷய மாக என்னிடம் உறுதிகேட்ட போது; நான் அந்த மன்னருடைய உருவப்படத்தைப் பார்த்தபின் பதில் கூறுவதாகச் சொன்னதற்கு, ஓவியத்தைப் பார்ப் பதைக் காட்டிலும் உருவத்தையே நேரில் பார்த்துக் கொள். "ஆனல்" ஐஸ்வரியம், குணம், குலம் ஆகிய வற்றில் மேம்பாடுற்றவர் என்பதற்குச் சந்தேகமே வேண்டாம் எனக்கூறினர். அப்போதிருந்து எனக் கொரு சந்தேகம். அதாவது-ஐஸ்வரியம், குணம், குலம் ஆகியவற்றில் மேம்பாடுடையவர் என்ருல் அந்த "ஆனல்" எதைக் குறித்தது? அவர் கூறிய விபரத்தில் மீந்து நிற்பது உருவம் பருவம் இரண்டுந் தானே. அந்த இரண்டுக் குந்தானே அந்த ஆனல் போலும்?

இன்று என்பிதா சகிகள், யாவரையும் அழைத் துள்ளதின் காரணமும் தெரியவில்லை. (ஒருபுறம்போக)

(மறுபுறம், அரசகோல அணிபணிகளுடன்தோன்றி)

பீமாங்கதன் :—பெண்ணே! வணக்கம்! இல்லை யில்லை வாழ்த்து.

சந்திரா :—(வியப்புடன்) வணங்கு முன்னரே வாழ்த்துச் சொல்கிருரே இவர் யாரோ தெரியவில்லையே (திரும்பி) பெரியவரே! வணக்கம்!

பீமாங்கதன் :—(ஆச்சரியங்காட்டி) பெரியவரேயா? யார் பெரியவர்? என்னைப்பார்த்தால் பெரியவராகவா தெரிகிறது? (முறுக்காக நடந்து) பெண்ணே! உருவங்

தான் கொஞ்சம் பெரிதே தவிர பருவத்தில் பெரிய வரல்ல, கண்ணே! என்னைப் பார்!

சந்திரா:—இதேதடா சனியன். என்ன வேகமான முன்னேற்றம் பெண்ணேயிலிருந்து கண்ணேவரை (திரும்பி) தோழியரையுங்காணோம் இதென்ன விபரீதம்! ஐயா! நீங்கள் யார்? தனித்திருக்கும் கன்னியிடம் வந்து பெண்ணே கண்ணேயெனப் பேசுகிறீரே.

பீமா:—உன் தனிமையைத்தானே நான் விரும்புகிறேன் மேலும் இவ்வளவு கட்டுக்காவல்களுள்ள உன்னிடத்தில் யார் வருவார்கள்? வர உரிமையுள்ளவர்கள் தான் வருவார்கள்.

சந்திரா:—அதைத்தானே நானும் கேட்கிறேன்.

பீமா:—அப்படிக்கேளு மந்திரி! ஓ மந்திரி இல்லேயோ, சரி தான் நானே சொல்லிவிடுகிறேன் சொல்லட்டுமா?

சந்திரா:—சொல்லத்தான் சொல்கிறேனே இதற்கும் ஒரு கேள்வியா? சொல்லும்!

பீமா:—உம்—ம்! சொல்லடா கட்டியம்! இல்லேயோ சரிசரி கேள்! முத்தமிழ் முழங்கும் உத்தம நாட்டதிபன் நான். உன்னே மணக்க உன் தந்தை நிச்சயித்துள்ள மாப்பிள்ளேயான மகாராஜராஜ மதன ஸிங்கார தீரவீரபராக்கிரம கோலாகலசீல மாமாண்புமிக்க பீமாங்கதபூமான் என்று சொன்னால் யாருக்குந் தெரியும். இல்லேயில்லே தெரியாது, இதுவே எனது சொந்தச் சமுக சுமுக விலாசம்.

சந்திரா:—ஆசாமி பாதி போலும்? (மேனேக்கி) ஐயோ என் தந்தையுமா இப்படி? இந்த வயோதிக மாமிச மூட்டையைக் கட்டிக்கொண்டு யார் தான் அழுவார்கள்? (திரும்பி) மன்னு! உம்மை மணக்க என் மனம் சம்மதிக்கவில்லே.

பீமா:—மனம் சம்மதிக்கா விட்டால் போகிறது நீ மட்டும் சம்மதித்தால் போதும். மனம் உனக்கே தவிர மனதுக்கு இல்லேயே.

சந்திரா :—ஆசாமி அரையே தான் (பார்த்து) ஐயா! மனம் சம்மதிக்கவில்லை யென்றால் எனக்கு சம்மதமே இல்லை யென்று தான் அர்த்தம்.

பீமா :—உன் அப்பா சம்மதிக்கிறாரே.

சந்திரா :—அப்படியானால் அவரையே கல்யாணம் செய்து கொள்வது தானே.

பீமா :—என்ன சந்திரா விளையாடுகிறாய்.

சந்திரா :—விளையாட்டல்ல உண்மையாகத் தான் சொல்லு கிறேன். எனக்குக் கல்யாணமும் வேண்டாம் நீரும் வேண்டாம்.

பீமா :—சந்திரா! காரணம் சொல்லாமல் கல்யாணம் வேண்டா மென்றால அது சரியா? நீயும் நானும் தனிமையில் சந்தித்து சல்லாபமாகப் பழக வேண் டும் என்பதற்காகவே தோழிகளை யெல்லாம் விலக்கி யுள்ளார் உன் தந்தை. பார்! என் வயதென்ன அதிகமா? அழகென்ன குறைவா? அந்தஸ்தென்ன மட்டமா? மீசை முறுக்கிலே மோசமா? சும்மா தனிப்புல் மேய்ந்த மாதிரி மேலெழுந்த வாரியாகப் பார்த்து விட்டு லேசாகப் பேசாதே. பார்! நன்றாகப் பார்! இந்த நாட்டிலே எனக்கு மிஞ்சிய சுந்தர புரு ஷன் யார்?

சந்திரா :—ஆஹா! மன்மதனுக்கு எதிரியல்லவா நீர் முக அழகும், தங்களை முந்திக் கொண்டு வரும் சால் போன்ற வயிற்றின் மகா அழகும் கண்கொண்டு பாக்கலாமா? (உற்றுநோக்கி) அடடடடே! சோற் றுப்பானையை அப்படியே வைத்துக் கட்டிக் கொண்டு வந்திருக்கிறீரே! பாவம்! வந்து நேரமாகி விட்டதே. பசிக்குமே உங்களுக்கு. அப்படி ஓரமாக ஒதுங்கி அவிழ்த்து வைத்துச் சாப்பிடுங்கள்!

பீமா :—(சினம்) (தொந்தியைத் தடவி) யார் சொன்னது சோற்றுப் பானையென்று. கொழுத்த தொந்தி யாக்கும் இது. இளமையிலே நான் அதிகமான

தேகாப்பியாசம் செய்ததனால் சதையெல்லாம் ஒன்று சேர்ந்து வயிற்றுக்குள்ளே புகுந்து கொண்டது. நீ மாத்திரம் என்னோடு வருவாயானால் அப்புறம் பத்து மாதங்களில இப்படியாகி விடுவாய்

சந்திரா :—சீ! (சினந்து) மரியாதையாக ஓடுகிறாயா அல்லது!

பீமா :—(கையை மறைத்து) நிறுத்து—!

ஓடமட்டும் சொல்லாதே! அது உடம்புக்கு ஒத்துக் கொள்ளாது. கண்ணே! என் கண்ணின் மணியே! சரச சல்லாப உல்லாச சிங்கார கெம்பீர வாணி! இதோ அந்த மன்மதன் அவனது எதிரியான என்னை கரும்பு வில்லில் சுரும்பு நாணேற்றி அரும்பு மலர்க்கணை தொடுத்து வாட்டுகிறான். இன்னுங் கொஞ்சநேரத்தில் நீ என்னைக் கட்டித்தழுவி காப்பாற்றுவிடில் என்னுயிர் உன் முன்னிலையிலேயே போய்விடும் உண்மை இது உண்மை முக்காலும் உண்மை.

(தடுமாறித் தடுமாறி விழுந்து நெருங்கி)
(கட்டிப் பிடிக்க முயலல்]

சந்தி :—ஐயையோ! காமப்பிராசே! என்னைத்தொடாதே!

பீமா :—தொட்டால் என்னடி ஒட்டிக் கொள்ளுமோ? என் கட்டிக்கரும்பே கனிரசமே!....

(கண்களைச் சுழற்றிச் சுழற்றிப் பார்த்து வளைந்து வளைந்து நோக்கி நிற்கவும்)

சந்திரா :—அடப்பாபமே! நீ என்ன பெண்களையே பார்த்திராதபேயுலகவாசியா? அள்ளி விழுங்குவது போல ஏன் உனது ஆந்தைக்கண்போன்ற கண்களை அசைக்காமல் பார்த்து அச்சுறுத்துகிறாய்? கண்ணைப் பார் கண்ணை.

பீமா :— கண்ணை மட்டுமென்ன? சகல அங்கங்களையுமே பார்!

(கட்டித்தழுவ நெருங்கவும்)

சந்திரா :—(தட்டிவிட்டு விலகி ஒதுங்கித் துடிதுடித்து) அட சண்டாளப் பாவி! என்னைத் தொந்தரவு செய்யாதே! கொழுந்து விட்டெரியும் கொடிய கற்புக்கனல் நான்.

பீமா :—(சிரித்து) நான் என்ன விட்டில் பூச்சியா வீழ்ந்து மடிய? (கிமிர்ந்து) கனலையும் உண்ணும் கடுநெருப்புக் கோழியடி நான். (பிடித்திழுக்க)

சந்திரா :—ஐயோ! அபாயம்! அபாயம்! யாருமில்லையா என்னைக் காப்பற்ற—ஆ!

(திடீரென்று விஜயேந்திரன் தோற்றம்)

(பீமாங்கதன் தவடையில் ஒரு அடிவிழுகிறது அடியின் அதிர்ச்சியால் மூர்சையாகி விழுகிறான்.)

(வீரகுமாரன் பீமாங்கதனைத் தூக்கிப் பிடித்து நிறுத்த அவன் தள்ளாடுகிறான்.)

(விஜயேந்திரன் சந்திரா கண்கள் சந்திப்பு.)

(இதை உணர்ந்த வீரகுமாரன் பீமாங்கதனைத் தாங்கிப் பிடித்துக் கொண்டே போகிறான்.)

(வீரகுமாரன் போன பிறகு விஜயேந்திரன் செல்ல முயலும் போது மருட்சியோடு எங்கி நின்று,)

சந்திரா :—(பார்த்து) என்ன இது! போகிறாரே! ஆபத்தில் உதவியவரை இன்னாரென்றறிந்து நன்றி செலுத்த வேண்டாமா? (வெட்கி) நாணம் வேறு குறுக்கிடு கிறது ஆணைக் கெடுக்கும் கோபம் போல—

(விஜயேந்திரனும் நடந்து செல்லமுடியாத தவிப்பு)

விஜ :—இது என்ன? கால்கள் வேலை நிறுத்தம் செய்கின் றனவே! வந்தவேலை முடிந்தும் வந்த வழியே போக மாட்டேன் என்கின்றனவே என் கால்கள்.

சந்திரா :—பறித்தாலும் அவரை விட்டு அகலமாட்டேன் என்கின்றதே பார்வை. என்னை யறியாமலே என் மனம் இவரை நாடுகிறதே! இரும்பைக் கவரும் காந் தம் போல என் கருத்தைக் கவர்ந்து விட்டார் கட் டழகர். அதோ (பதறி) போகப் புறப்படுகிறாரே! ஏனிந்த வெட்கம்?

விஜ :—இதென்ன விபரீதம்! வீரகுமாரன் அங்கு காத் திருப்பார் நான் இங்கேயே நிற்கிறேன்! நடக்க

நீனைக்கிறேனே தவிர நடக்கவில்லையே இந்த இடத்தை விட்டு. என் மனதில் ஏன் இந்தப் புத்துணர்ச்சி என்றுமில்லாதபடி இன்று. சரி! நேரமாகிறதே செல்லலாம். (-போக-)

சந்திரா :—போகிறாரே! (பதறி) ஐயோ முன்பின் அறிமுக மில்லாத ஒருவரை என்ன சொல்லி அழைப்பது? அதிலும் வாலிபர்........(நாணம்.)

விஜ :—(போகமுயன்று நின்று) இனியும் தாமதிப்பது) இதமாகாது. (போக)

சந்திரா :—(பதறி அவசரமாக முந்தானையால் முகமறைத்து) ஐயா! என் நன்றி வணக்கம்! ஏற்றுக்கொள்ள வேண்டும்! களவாடப்பட இருந்த என் கற்பைக் காத்த தங்களுக்குவேறு என்ன கைம்மாறு செய்யப்போகிறேன்.

விஜ :—பெண்ணே! பிறர்க்குதவுவதே பிறவியின் பெரும் பணி. கைம்மாறு கருதவில்லை நான். கடமையைத் தான் செய்தேன் இனிநான் இங்கு நிற்பதும் அழகல்ல, ஆனால் உன்னிடம் ஒன்றைப் பற்றி மட்டும் கேட்டுவிட்டுப் போக விரும்புகிறேன். அதைக் கேட்பதுங்கூட அவ்வளவு அவசியமோ முறையோ அல்லதான் என்றாலும் சந்தர்ப்பத்தை யநுசரித்துக் கேட்க வேண்டியிருக்கிறது.

சந்தி :—கேளுங்களேன்! எதுவாயிருந்தாலும் முடியுமானால் தடையின்றிப் பதில் சொல்லுகிறேன். தங்களிடம் மறைக்கத்தக்க செய்தி என்னிடம் ஒன்றுமில்லை.

விஜ :—அவ்வளவு விசேடமானது ஒன்றுமில்லை. நீ யார்? இந் நிகழ்ச்சியின் காரணம் என்ன? உனக்கு மணமாகி விட்டதா?

சந்திரா :—எனக்கு "மனமணம்" ஆகிவிட்டது.

விஜ :—மனமணமா?

சந் :—ஆம்!

விஜயே :—அப்படி யென்றால்?

சந்திரா :—இன்னாரைத்தான் மணப்பது என்று மனம் முடிவு செய்வதுண்டே அது.

விஜ :—மேடை மணம் இன்னும ஆகவில்லையாக்கும்?

சங் :—ஆம்! "மேடை மணம்" பலரறியச் செய்து கொள்ளும் ஒரு வெளிவேடச் சடங்குதானே? அதற்கு அடிப்படையானது மனமணம் தானே?

விஜயே:—ஆமாம்!

சந்திரா :—அதுபோல ஒரு எழில்மிக்க இளங்தோன் றலை என் இதயபீடத்தில் இருத்தி விட்டேன். அவரையே தான் மணந்து கொள்ளப் போகிறேன்.

விஜயே :—அந்த அரும்பெரும் பாக்கிய அதிர்ஷ்டசாலி யாரோ?

சந்திரா :—அவர் ஊர் பேர் முதலியவற்றை இன்னுங் கொஞ்ச நேரத்தில் சொல்லுகிறேன். அவை இப் போது எனக்குக் கூடத் தெரியாது அவர் இருக்கு மிடம்மட்டும் தெரியும் நிச்சயமாய்.

விஜ :—(தனக்குள்) இதென்ன புதுமை! (திரும்பி) அவரின் இருப்பிடத்தையாவது செல்லலாமா?

சங் :—இருப்பிடமல்ல, தற்போது இருக்குமிடம்.

விஜ :—அதிலும் அப்படியா? (தனி) மனமே! பதருதே! பொறு! (திரும்பி) அதையாவது சொல்லவிருப்பப் பட்டால்—

சங் :—(தனி) துணிந்து கூறிவிட்டால்தான் என்ன? இவ் வளவுதூரம் ஆர்வங்கலந்த அன்புடன் உரையாடும் இவருக்கு நம்மை அடையவேண்டும் என்ற எண் ணம் இல்லாமலாபோகும்? ஒருவேளை எற்கெனவே மணமாகியிருந்து ஏகபத்தினி விரதத்தைக் கடைப் பிடிப்பவராக இருந்தால்........?

விஜ :—மெல்லியல் நல்லாய்! ஏன் ஆலோசனை? சொல்ல விருப்பமில்லையென்றால் செல்லவாவது விடைகொடு!

சந் :—இல்லையில்லை ! இதோ சொல்லிவிடுகிறேன் சந்திரபுரி இராஜநந்தவனத்தில் சந்திராங்கனை என்னும் பெண்ணுக்கு அருகாக நின்று—

விஜ :—என்ன! சந்திரபுரிநந்தவனமா ? எந்தச் சந்திரபுரி ?

சந் :—இந்தச் சந்திரபுரி.

விஜ :—(தனி) மனமே ! அவசரப்படாதே ! (திரும்பி) நின்று....

சந் :—இதே சந்திரபுரி நந்தவனத்தில் இதே சந்திராங்கனையோடு இதே நேரத்தில் இதேவிஷயத்தைப்பற்றி இதவுரையாடிக் கொண்டிருக்கும் உத்தமராகிய

(நாணம்)

விஜ :—(தனி) ஆஹா ! என்பாக்கியமே பாக்கியம் ! பொறு மனமே ! முழுமையும் அறிந்து கொள்ளுமுன். (திரும்பி) உத்தமராகிய........?

சந் :—(நாணிக் கோணி) தங்களையே என்தலைவராக அடைய உறுதிகொண்டுள்ளேன்.

விஜ :—(விலகி தனி) என்ன இது ! ? (மருண்டு) என் மனம் ஏன் இப்படிக் குழம்புகிறது ? உடல்வெடவெடக்கிறதே ! (மயங்கி) சரிசரி ஒரு ஏழைக்கு எதிர்பாராமல் திடீரென ஓர் புதையலோ ஏராளமான சம்பத்துக்களோ கிட்டுமானால் அவனது சித்தம் கலங்கிவிடுமென்பது சரீர சாஸ்திரிகளின் துணிபு, அதுபோல என் அறிவு சிதைகிறதோ ? அல்லது இந்தப் பெண்ணின் அழகில் ஈடுபட்டதால் மெய்மறந்து பகற்கனவு காண்கிறேனோ ? (கண்களைத் துடைத்து) அப்படியுமில்லை. நினைவோடு தானே நிற்கிறேன். (திரும்பி) பெண்ணே ! இது உண்மைதானா ?

சந் :—ஏன் இந்தச் சந்தேகம் ?

விஜ :—முன்பின் அறிமுகமில்லாத நீ என்னைக் கண்டதும் காதல் கொண்டு கணவனாகக் கொண்டேன் என்றால் அதை நான் எப்படி நம்புவது ?

சங் :—என் வார்த்தையின் உறுதியினால் தான் நம்ப வேண்டும்.

விஜ :—அப்படியே நம்புகிறேன். என்றாலும் எனது பண்புகளையும், பழக்க வழக்க குணநலங்களையும் அறியாது அழகையும் உருவையும் மட்டும் கண்டு காதல் கொண்டது தகுதியோ முறையோ அல்லவே.

சங் :—தகுதியும் முறையும் இல்லாவிட்டால் துணிந்து எனது உறுதியை வெளியிடுவேனா?

விஜ :—இந்த "உறுதி" உலக அனுபவத்தை ஒட்டியதா? அல்லது ஒருதலை துணிபா?

சங் :—உலக அநுபவமும் உயரிய ஆராய்ச்சியும் கூடிய ஒழுக்கமான உறுதியும், உத்தம நெறிமுறையும் ஆகுமே அன்றி ஒரு தலை துணிபு அல்ல.

விஜ :—அது தான் எப்படி யென்று............

சங் :—விளங்காது தான், கூறுகிறேன் : உலகத்திலே ஒரு பெண்ணுக்கு வரனைத் தேர்ந்தெடுக்கும் போது அந்தப் பெண்ணின் தந்தை, மணமகனுக்கு நிறைந்த கல்வியை விரும்புவான். தாய், மிகுந்த செல்வத்தை விரும்புவாள், நெருங்கிய சுற்றத்தார் குல உறவை விரும்புவார்கள். இவர்களுக்கிடையில், மணமாகப் போகும் பெண்ணானவள், கைநிறைந்த பொன்னைப் பார்க்கிலும் கண்நிறைந்த ஆடவனையே மேலாகக் கருதி விரும்புவாள் இது இயற்கை. கன்னியும் காளையுமான காதலரிருவர் கருத்தொருமித்து ஆதரவு பட்டதே இன்பம்.

நான் தங்களை உருவத்தை மட்டும் கண்டு உள்ளத்தைப் பறி கொடுத்து விடவில்லை.

ஆபத்தில் என்னைக் காத்து, அந்த ஜடனைத் தாக்கியதால், பரோபகாரச் சிந்தையும் பயமில்லா வீரமும்,

தற்காக்கப்பட்ட பெண்ணான நான் தனித்திருப்பதால் ஏதும் பேசுவது சரியல்ல வென்று அந்த

க்ஷணமே இந்த இடத்தை விட்டு வெளியேற முற்பட்டதால் நன்னடக்கையுள்ள தன்னடக்கப் பெருந்தகையென்பது மட்டுமின்றி, அங்க லட்சணங்களால் ஓர் அரசிளங்குமரன் என்று ஐயமற அறிந்து தான் அன்பு செலுத்தினேன். என்னை ஏற்றுக் கொள்ளுங்கள் சோதித்தது போதும்!

விஜ:—தீர்ந்தது ஐயம். ஆனால்—.!

சங்:—என்ன?

விஜ:—நீ கூறியபடி நான் அரச வம்சத்திற் பிறந்திருந்தாலும் அரச பதவியிலிருக்கும் அரசிளங்குமரனல்ல, அடிமைத் தொழில் புரிந்து வாழும் அமர்க்களத் தளபதி நான்.

சங்:—தாங்கள் யாராயிருந்தாலும் எந்த நிலையிலிருந்தாலும் என் காதலர் தான்.

விஜ:—ஏனென்றால் பகட்டாகத் திரிந்து பாவையர் மனதைக் கவர்ந்து அவர்களின் வாழ்க்கையையே பலியிடத்துணியும் புறட்டர்களும் இருப்பதால் தான் நான் அந்தவர்க்கத்தைச் சார்ந்தவன் அல்ல என்பதை முதலிலேயே சொல்லிக் கொண்டேன்.

பெண்ணே! விஜயபுரி நாட்டின் "தளபதி" நான். என் பெயர் விஜயேந்திரன் என் தாய் தர்மாட்சி. நானும் எனது இளவரசர் வீரகுமாரரும் படை நடத்திச் செல்லும் பாதையில் உன்னைச் சந்தித்தேன் எனது இதய ராணியாகவும் ஏற்றுக் கொண்டேன்.

சங்:—நான் இந்தச் சந்திரபுரிமன்னர் ஜெயச்சந்திரனின் ஒரு மகள். இளமகவாக இருக்கும் போதே என் தாய் இறந்து விட்டாள். இப்போது தங்களால் தண்டிக்கப்பட்ட அந்த மாமிச மலையைக் கட்டிக் கொண்டு மாரடிக்கச் சொல்கிறார் வயதாகியும் மறுமணம் செய்து கொள்ள மங்கையர்க்கு வலைவீசும் என்பிதா. அது அவர் விருப்பம் என் விருப்பம்....

விஜ :—(மகிழ்ந்து) இது.

சங் :—ஆம் சுவாமி! என்னைக் கைவிடமாட்டீர்களே!

விஜ :—வானம் இடிந்து என் தலையில் விழுந்தாலும் பூமியே வெடித்து என்னை விழுங்குவதானாலும் நான் உன்னை ஒருபோதும் கைவிடவே மாட்டேன் இதை நம்பு!

சங் :—நாம் பிரிக்கப்பட்டால்?

விஜ :—நம் உயிரும் பிரியட்டும். நம் வாழ்வு மறையட்டும். கண்ணே! கவலைப்படாதே! நான் போய் வருகிறேன். இளவரசர் காத்திருப்பார் எனக்காக.

சங் :—இளவரசரா?

விஜ :—ஆம்! நான் சொல்லவில்லையா சற்றுமுன். விஜயபுரி தளபதிதானே நான்.

சங் :—ஓகோ! சரி! சரி! வெற்றிமேல் வெற்றிபெற்று வரும் விஜயேந்திர பூபதி தாங்கள் தானா....? கேள்விப்பட்டிருக்கிறேன் நிறைய.

விஜ :—ஆம்! சந்த்ரா! அழகே உருவான சந்திராங்கனையின் மேதகு காதலில் வெற்றிபெற்ற விஜயேந்திரன் நான்தான்.

சங் :—பரிகாசம்!

விஜ :—பரிகாசம், உல்லாச சல்லாபத்தின் வாசற்படி. சந்த்ரா! (சரசமாகப் பாடிவிளையாடி பிறகு)

கண்மணி சந்த்ரா! உனது பிரேமைக் கைதியை விடுதலை செய்! இளவரசரை இனியும் காத்திருக்கச் செய்வது கூடாது. ஆகவே நாங்கள் விஜயபுரி சென்று மீண்டும் வந்து நமது மணவினையை நிறைவேற்றிக் கொள்வோம்.

சந்த் :—(ஏங்கி) விஜயபுரிக்கா? தாங்கள் செல்லவா?

விஜ :—ஆம்?

சந் :—நானும் வருவேன்.

விஜ :—இப்போது வேண்டாம் சந்த்ரா ! இதோ (தன்கணை யாழியை அவள் கையிலிட்டு) இந்த ஏழு எழுத்துக்களை யும் நாளொன்றுக்கு ஒவ்வோ ரெழுத்தாக எண்ணிக் கொண்டிரு ! ஏழே நாட்களில் எப்படியும் வந்து விடுகிறேன்.

சந்த்ரா :—உண்மையாகவே தாங்கள் போகத்தான் வேண்டுமா ?

விஜ :—ஆம் கண்ணே ! அதுவும் தாமதிக்காமல்.

சந் :—(தன்கணையாழியைக் கழற்றி அவன் கையிலணிந்து) இப் போதே என்னை விட்டுவிட்டு உமது இளவரசரைப் பார்க்க இப்படி துடியாய்த் துடிக்கிறீர்களே ! ஊருக் குப்போனதும் என் ஞாபகமே இல்லாமல் உள்நாட்டு வெளிநாட்டு விவகாரங்களில் சிந்தையைச் செலுத்தி என்னையே மறந்து விட்டால் ?

விஜ :—ஓகோ ! சத்தியவான் போலச் சந்தித்த நான் துஷ் யந்தன் போல துறந்து விடுவேன் என்ற பயமோ ? அப்படி துர்வாசர் ஒருவரும் தோன்ற மாட்டார் நமது காதற்பாதையில், இது உறுதி.

சந் :—உறுதியில் மறதி குறுக்கிட்டால் ?

விஜ :—“மறதி” சந்த்ரா ! மறக்கக் கூடிய விதத்திலா உனது மாதுர்ய சொரூபம் எனது இதயமென்ற பளிங்குக் கல்லில் எழுதிச் செதுக்கப்பட்டிருக்கிறது ? (நெஞ்சைத் தொட்டுக்காட்டி) இந்த உள்ளமே உடைந் தாலன்றி உனது உருவம் ஒருபோதும் மறையாது மறப்பதென்பதேது ? நான் போய் வரவா ?

சந் :—மறக்கவே மாட்டீர்களே ?

விஜ :—மரணத்திலுமில்லை.

சந் :—(தலையசைத்தல்) அவன் போகவும்) சக்தியே ! என்காத லனை நாதனாக எனக்குத் திருப்பித்தர வேண்டு கிறேன்.

—

## காட்சி 15

இடம்: விஜயபுரி அரசவை. காலம்: பகல்.

இருப்போர்: வெற்றிவீரமன்னன், ஆலகாலன், நாகநாதன்,

வெற்றி:—நம்நாடு செய்த நற்றவப் பயன்தான் நாம் விஜயேந்திரனை வீரத் தளபதியாக அடைந்தது. வாள் சுழற்றும் லாகவமும் வேல் எறியும் வேகமும் சரம் தொடுக்கும் சாதுர்யமும் அடடடடடட! வர்ணிப்பதென்றால் வாய் ஒன்று போதாது.

ஆல:—ஆம்! வெற்றி நமதே இதிலுங்கூட.

நாக:—மன்னா! இராஜராஜனும் சாமான்யனல்ல கடலனைய படைகளும், காலனின் மாற்றுருப்போன்ற கள அமைப்பும் உடையவன்.

வெற்றி:—இருக்கலாம்; பேருடம்பும் கூரிய கொம்பும் உள்ளது யானை. ஆனால் சிங்கத்தைக் கண்டாலே அச்சம். நாகநாதரே! விஜயேந்திரன் ஊக்கம் மிகுந்த சிங்கம், இராஜராஜன் அது இல்லாத யானை.

(அதியுக்தன் விரைந்து வந்து வணங்கி)

அதி:—வணங்குகிறேன் வேந்தே!

வெற்றி:—(மலர்ச்சியோடு) வா! அதியுக்தா! போர்?

அதி:—முடிந்தது அரசே! முழுவெற்றி நமக்கு.

வெற்றி:—நாம்தான் தோல்வியே அடையாதவர்களாயிற்றே.

அதி:—வேந்தே!

வெற்றி:—வெற்றிச் செய்தியைக் கொண்டுவந்த வீரனே! இதோ மகிழ்ச்சிப் பரிசு. (மணிமாலை பரிசு வழங்குதல்)

அதி:—மன்னரே! (தயங்கல்)

வெற்றி:—என்ன தயக்கம்?

அதி:—வேந்தே! வாய் கூசுகிறது.

வெற்றி :—வக்கணை வேண்டாம், மாற்றம் என்ன ?

அதி :—அரசே ! விஜயேந்திரனுக்கு போரில் மட்டுமல்ல அவன் வாழ்விலும் வெற்றி.

வெற்றி :—என்னடா உளறுகிறாய் ?

அதி :—உண்மையைச் சொல்கிறேன் அரசே ! இராஜ ராஜனை வென்ற விஜயேந்திரன், இளவரசர் வீரகுமாரரையும் சிறைப்பிடித்து-

வெற்றி .—ஆ ஆ ! (உடை வாளை உருவி) என்ன துணிச்சல். ஆஹ் ! (என்று பாயும் தருணம்)

ஆலகால :—(அரசரைத் தடுத்து நிறுத்தி) அரசே ! தூதன் ! பாபம் !

வெற் :—(வாளை உரையில் போட்டு) என் உப்பைத் தின்று என்னிடமே உனது துரோகச்சிந்தை ! நன்றிகெட்ட நாயே ! விஜயேந்திரன்மீது உனக்கென்ன பொறாமையா ? வஞ்சமா ? நீ என்னடா அவன் மாற்றாந் தாய் பிள்ளையா ?

அதி :—மகாராஜா ! தங்கள் மீது ஆணை ! தவறாக நான் எதையும் சொல்லவில்லை. இளவரசர் இருக்குமிடம் எவருக்கும் தெரியாது. படைகளும் அவன் காட்டும் பாதையிலேயே—

வெற் :—வானிடிந்து விழவில்லையே உன் தலையில் இன்னும் பாவி ! அபாண்டத்தைச் சுமத்துகிறாயேடா ! அக்ரமக்காரா ! காராக்ரஹம் உன்னை அழைக்கிறது. ஏய் ! யாரங்கே ? (சேவகன் வந்து வணங்கி நிற்க) இவனை இழுத்துப் போங்கள் ! காராக்ரஹத்தில் தள்ளுங்கள் ! காற்றையுண்டு உயிர் வாழட்டும் காதகன்.

நாகநாத :—மகாராஜா !

அதி :—(நிமிர்ந்து) அரசே ! நான் மரணத்தையும் வரவேற்கிறேன். தங்கள் உப்பைத் தின்று வளர்ந்த இந்த உடல் தங்களுடையதே. சாவதற்கும் நான் அஞ்சவில்லை. இரத்த வெறி கொண்ட சண்டாளன் விஜயேந்திரன் சாவுமுனையிலே தங்களைச் சந்திக்க வரு

கிருன். வளைத்த வில்லில் விடுக்கும் கணைக்கு அடுத்த இலக்கு தாங்கள்.

வெற்றி :—போதுமடா உன் பொய்ப் பிரசங்கம். பித்தலாட்ட எத்தனே! பேராசைப் பேயே! பொருமைப் பொக்கிஷமே! விஜயேந்திரனுக்குத் தோண்டும் படுகுழியில் உனக்குப் பதவிப்பீடமா? அவன் துன்பத்தில் உனக்கு இன்பமா? உம்! இழுத்துப் போங்கள்!

(அதியுக்தனைக் கொண்டு போகவும்)

ஆலகா :—அரசே! இதில் ஏதோ சூது............

வெற் :—அவனின் சூதான எண்ணத்துக்குத்தான் சரியான தண்டனை தந்து விட்டேனே.

நாக ;—அது இல்லை மகாராஜா! சிறைக்குக்கூட தியங்காமல் செல்லுகிருன். கண்ணீர் விடுகிருன்.

வெற் ;—வேஷமிடுகிருன் ஆஷாடபூதி.

ஆல ;—விஷயத்தை விளங்கிக் கொள்ளாமலே விதிக்கப்பட்டது தண்டனை.

வெற் :—ஆலகாலரே! விஜயேந்திரனை நீர் நன்கு தெரிந்து கொள்ளவில்லை போலும்! அவன் என் வயிற்றிற் பிறக்கவில்லையே தவிர

நாக :—இருக்கலாம்; வஞ்சனைமுன் வாஞ்சை மறைந்து விடும்.

வெற் ;—நீருமா இதை நம்புகிறீர்?

நாக :—நான் நம்பவில்லை. நடந்ததை அறிய விரும்புகிறேன் எதற்கும் நம் ஒற்றர்களை அனுப்பி-----.

வெற் :—ஏய்! யாரங்கே! (ஏவலன் வந்து வணங்க) ஓடு! வசந்தபுரி சென்று விஜயேந்திரனையும் வீரகுமாரனையும் படைகளையும் கவனித்து உடனே உளவு கொண்டு வரச்செய் சாரணனையேவி.

(வணங்கிப் போகிருன்)

———

## காட்சி 16

இடம் :—சந்திரபுரி நந்தவன மறுபுறம். காலம் : பகல்

பீமாங்கதன் குப்புறப் படுத்திருத்தல், வீர குமாரன் அவனை எழுப்ப புரட்டியும் தட்டியும்

வீரகுமாரன் :—பெரியவரே ! பயப்படாதீர் ! கண்ணைத் திறந்து பாரும் !

பீமாங்க —அந்தப் பூதம் போய்விட்டதா ? (வாயில் இரத்தம் வழிதல் )

வீரகு :—பூதமில்லை, எழுந்திரும் ! பேசிக்கொண்டிருப் போம் !

பீமா :—பூதம் இங்கே வரும் என்று சொன்னீரே !

வீர :— அதுவும் இனிமேல் தான் வரும்.

பீமா :—அப்போ அது வந்து போகட்டும் அது வரைக்கும் இப்படியே படுத்திருக்கிறேன். பாதி உயிர் அந்த அடியிலேயேபோய் விட்டது மீதிப் பாதியும் அதைப் பார்த்தாலே போய்விடும் அது வந்தால் செத்துப் போனவன் போல கிடக்கிறேன்.

வீர :— அதிலும் ஒரு விஷயமையா !

பீமா :—என்ன விஷயமையா ! சீக்கிரம் சொல்லி முடியுங் கள் ஐயா !

வீர :—அது, தன் கையாலேயே அடித்து இறந்த பிணத் தைத் தின்னும் பூதம்.

பீமா :—(பதறி எழுந்து) ஐய்யையோ ! (உதறி) ஐயா ! ஐயா ! உமக்குக் கோடி புண்ணியம் ! என்னை எப்படியாவது காப்பாற்றி விடும் ! ஐயோ ! என் உயிர் பயணஞ் சொல்கிறதே.

வீர :— ஆஹா ! மோசம் போனீரே ! அதோ வருகிறதே பூதம்.

பீமா :—ஐயையோ ! (அவன் காலைப் பிடித்துக் கொண்டு) ஐயா ! நீங்கள்தான் என் தகப்பன். நான் உங்கள் மகன் போல. என்னைக் காப்பற்ற

வீர :—முடியாது. விடுமையா! நெருங்கி விட்டதே பூதம்.

பீமா :—ஐயையோ விடமாட்டேன். எப்படியும் என்னைக் காப்பாற்றி என்னுயிரை எமனூருக்குப்போகாமல் என்னூருக்கு அனுப்பிவைக்கவேணும். உறுதி சொல்லும் வரை உமது காலை விடவேமாட்டேன்.

வீர :—நல்லவேளை! அது பூதமில்லை. காலை விடுமையா!

பீமா :—அப்பாடா! போகப் போன உயிர் திரும்பி வந்தது.

(உதறி நெளித்து நிமிர்ந்து பார்க்கவும் உண்மையாகவே விஜயேந்திரன் வருவதைப பார்த்து விட்டு)

ஐயையோ! அது வந்து விட்டதே! ஐயையோ!

(பதறல் கதறல்)

வீர :—அடடே! உண்மையாகவே வந்து விட்டதே ஐயா! நான் சொல்வதைக் கேட்பீரா?

பீமா :—சாவதைத் தவிர வேறு என்ன சொன்னாலும் கேட்கிறேன். செத்துப் போய்விட்டால் அந்தப் பூதம் என்னைத் தின்னும் எனக்கு வலிக்கும்.

வீர:—கண்களை மூடிக்கொண்டு முன்போலவே படுத்துக் கொள்ளும்! அந்தப் பூதம் உம்மிடம் வந்து நயமாகவும் பயமாகவும் பேசினாலும் மூச்சைத் தவிர வேறொன்றும் வெளிவரக்கூடாது.

பீமா ;—சரி ஐயா! (சொன்னபடி செய்யல்) வீரகுமாரன் முன் செல்லல்)

விஜயேந் ;—(வேகமாகவந்ததும்) இளவரசே! எங்கே அவன்?

வீர ;—இங்கேயேதான் இருக்கிறார். ஆனால் அவர் உன்னோடு பேசமாட்டார்.

விஜ :—ஏன்? ரோஷமோ?

வீர ;—ரோஷமில்லாமலென்ன? மானங்கெட்டவரென்று மதித்தீர்?

விஜ :—மானங்கெட்டவன் மட்டுமா? மதிகெட்டவனுங்கூட.

வீர :—இப்படியெல்லாம் உள்ளதை உள்ளபடியே சொன்னால் அ...றி நியாக உன்னோடு பேசவே மாட்டார்.

விஜ :—இல்லை அவனிடம் நான் பேசத்தான் வேண்டும்.

வீர :—அவர் பேசும் நிலைமையிலிருந்தால்தானே பேச. அந்த ஒரு அடியிலேயே அவர் உயிர் போய்விட்டதே.

பீமா :—(படுத்தபடியே) ஐயையோ! உயிர் போய்விட்டது. என்று சொல்லாதீர். செத்ததைத் தின்னும் அது என்னை விழுங்கிவிடப் போகிறது.

விஜ :—(பேச்சு ஒலி கேட்ட பக்கமாகப் போய்ப்பார்த்து) ஐயா பெரியவரே! பயப்படாதீர்! நீர் யார்? (பீமாங்கதன் மௌனம்) (புறட்டி தட்டிப்பார்த்து) ஐயா! உம்மைத் தான். (மௌனம்) எழுந்திரும்! (மௌனம்) (சினமாக) எழுந்திருந்து பேசுகிறீரா இல்லையா?

வீர :—(பரிகாசமாக) வேண்டாம் வேண்டாம் அடிக்காதீர்!

பீமா :—ஐயையோ! (பதறியெழுந்து) ஆண்டவனே அபயம்! (நடுக்கம்) அபயம்!

விஜ :—பெரியவரே! பயப்படாதீர்!

பீமா :—நான் பயப்படவில்லை. என் உடம்புதான் நடு நடு நடு நடுங்குகிறது. (கண்ணை மூடியபடியே பேசல்)

வீர :—ஐயா! அது பூதமல்ல. மனிதர்தான். கண்ணைத் திறந்து பாரும்!

பீமா :—எனக்கு வேதனை உமக்கு வேடிக்கை. ஐயா! என் கன்னத்தில் விழுந்த அந்த அடி பூதம் அறைந்தது போல இருந்தது. கண்ணே இன்னும் சரியாய்த் தெரியவில்லை. பாருமையா! வயதாகியும் விழுகாத பல்லுகள் அந்த ஒரே அடியில் உதிர்ந்து விட்டதை. (காட்டல்)

விஜ :—பயப்படாதீர்! (பீமாங்கதன் கையைப் பிடிக்க)

பீமா :—(துடித்து) ஐயையோ! என்தெய்வமே! கையை விட்டு விடாவிட்டால் இதோ இப்போதே என்னுயிர் போய்விடும். ஐயா! என் ஆவிபிரியுமே என்றுகூட வருந்தவில்லை. நீங்கள் பிடித்திருக்கும் போது உயிர்

போனுல் பிரேதத்தைத் தொட்ட தீட்டு உங்களுக்கு வருமே என்றுதான்—.

விஜ :—கையை விடுகிறேன் ஓடிவிட மாட்டீரே?

வீர :—ஐயா ஓடினுலும் பிடிக்கவே முடியாது பாருங்கள்.

பீமா :—இல்லை ஐயா! விட்டால் போதும்.

விஜ :—சரி! (கையை விடவும்)

பீமா ;—அப்பாடா! (தெளிந்து) மாண்ட உயிர் மீண்டது. (பார்த்து வளைந்து வணங்கி) ஆண்டவனே! உத்தரவு கொடுங்கள்! ஓடிப் பிழைத்துக் கொள்கிறேன். உங்கள் பேரைச் சொல்லி. ஐயோ! நிற்க நிற்க நெஞ்சு கலங்கி நிலை தடுமாறும் போலிருக்கிறதே. (வீரகுமாரனைப் பார்த்து) ஐயா! நீங்களாவது சொல்லி விடுதலை வாங்கிக் கொடுங்கள்! உங்களுக்கு ஆயிரம் கும்பிடு போடுகிறேன். தர்மம் தலைகாக்கும் தங்கள் பிள்ளை குட்டிகளெல்லாம் நல்லா இருக்கும்.

விஜ :—உஸ்ஸ்! சப்தம் செய்யாதீர்! மூடும் வாயை.

பீமா :—(வாயைக் கையால் மூடிக் கொள்ளல்)

விஜ :—ஆமா! இவ்வளவு வயதான உமக்கு என் இந்த சபலபுத்தி?

பீமா :—(மௌனம்)

விஜ :—கேட்டகேள்விக்குப் பதில் சொல்லுமையா!

பீமா :—(மௌனம்)

விஜ :—பேசமாட்டீர்? (கையை ஓங்கல்)

பீமா :—(பதறிவிலகி நின்று கையால் வாயைப் பொத்தியபடியே கதறி அழுகிருன்.)

விஜ :—ஓய்! அழுகையை நிறுத்தும்! பதில்சொல்லும்!

பீமா —(ஒருகையால் வாயைப்பொத்தியபடியே ஜாடைசெய்து வீரகுமாரனைஅருகழைத்து)ஐயா! பேச அனுமதி வாங்குங்கள் மூடிய வாயைத்திறக்கலாமா என்று கேட்டுச் சொல்லுங்கள்.

விஜ :—பேசும் பேசும் ! ஆனல் கூச்சல்போடாமல், அழாமல், கேட்டதற்கு மட்டும் பதில் சொல்லவேண்டும்.

பீமா :—விட்டது வாய்ப்பூட்டுச் சட்டம்.

விஜ :—ஏய் வேண்டாம் வீண்பேச்சு, விர்த்தாந்தம் தேவை.

பீமா :—(பயந்து) புத்தி ! ஐயா ! சந்திராவின் தகப்பனுக்கு என்பெண்ணையும் சந்திராவை எனக்கும் என்று தீர்மானித்தோம்.

விஜ :—(வீரகுமாரனைப் பார்த்து) கிழங்களின் கூட்டுமுன்னணி பார்த்திரா ?

பீமா :—சந்திராவின் தகப்பனர் சம்மதத்தின் பேரில்தான் அவளைநெருங்கினேன். நினைத்தாலே நெஞ்சு நடுங்குகிறது அந்த அடி. அப்புறம் எல்லாம் தெரிந்தது தான். ஐயா ! சத்தியமாகச்சொல்லுகிறேன். அந்த அறை விழுந்ததைப்பார்த்த குமரவாலிபர்கள் கூட கல்யாணத்தைப் பற்றி நினைக்கவும் மாட்டார்கள்.

விஜ :—சரி ! இப்போது உமக்கு என்னவேண்டும் ?

பீமா :—என்னை விட்டுவிட வேண்டும். வேறென்ன வேண்டும் ! இந்த " யுவபெருமான்க்ருபை வேண்டும் "

விஜ :—என் அந்தப் பெண்ணை மணந்து கொள்வது தானே ?

பீமா :—ஐயா ! வேண்டாம் வேண்டாம் ! பார்க்கப்போன போதே பல்லுதிரும்படி அடிவிழுந்தது. கல்யாணமென்ருல்இனிகாலனூர்போகவேண்டியதுதான். ஐயா போதும் நான் கல்யாணம் பண்ணினதும் கட்டையில் ஏறினதும். இதை விட்டுத் தப்பிப்பிழைத்தாலே போதும் !

விஜ :—அப்படியானல் நீர் நேரே உமது ஊர்போய்ச் சேரும் !

பீமா :—இப்படியே போகிறேன். நீங்கள் மகராஜராயிருங்கள் (போகிருன்)

வீர :—பெரியவரே !

பீமா :—(திரும்பிவந்து) என்னையா இது? சாமிவரங்கொடுத்தும் பூசாரிகுறுக்கிட்டமாதிரி. என்ன சமாச்சாரம்?

வீர :—தாகசாந்தி செய்து போகலாமேயென்று கூப்பிட்டேன்.

பீமா :—"தேகசாந்தி" பெற்றதேபோதும்! தாகசாந்திக்குச் சமயமில்லை நான் போய்வருகிறேனையா (போக)

விஜ : —ஓய் !

பீமா :—(பதறி விழுந்துஎழுந்து ஓடிவந்துகைகட்டிவாய்பொத்தி) தெய்வமே !

விஜ :—உமது பெயர் சொல்லவில்லையே !

பீமா :—ஆமாங்க ! என்பேர் பீமாங்கதன்.

விஜ :—பொருத்தமானபெயர். போய்வாரும்! (பீமாங்கதன் போக)

வீர :—பீமாங்கதரே !

பீமா :—(வேகமாகத் திரும்பிவந்து) ஏனையா என்னை உயிரோடுவிட உமக்கு உத்தேசமில்லையோ! நீரென்ன எமலோகத் தரகரா? அந்த வேலைக்கு நான்தானு கிடைத்தேன். என்ன விஷயமையா ?

வீர :—உமது அணிபணிகளை யெல்லாம் போட்டுவிட்டுப் போகிறீரே. என்று கூப்பிட்டேன். வேறொன்றுமில்லை.

பீமா :—அதுகளெல்லாம் போனுல் போகிறது. தலைக்கு வந்தது தலைப்பாகையோடு போகட்டும் என்ற மாதிரி இந்த இடத்தை விட்டு நான் போனுல் போதும் என்று புறப்பட்டு ஓடினுலும் திரும்பத் திரும்பக் கூப்பிட்டு என் ஜீவனைவதைக்கிறீரே ஐயா இன்னும் ஏதாவது கேட்கவேண்டியது சொல்லவேண்டியது பாக்கியிருந்தால் ஒரேயடியாக இப்போதே முடித்துகொள்ளுமையா, பிறகு போகும் போது தடைசெய்து புண்படுத்தவேண்டாம்.

வீர :—இனி போகலாம்.

பீமா ;—(விஜயேந்திரனைப்பார்த்து) பகவானே ! நான் போக உத்தரவா ?

விஜ :-—வருத்தம் இல்லையே ?

பீமா ;—வருத்தமாவது; திருத்தம் அடைந்தேன் திருத்தம்! சீர்திருத்தம்.

விஜ ;—சரி ! சென்று வரலாம்.

பீமா ;—(வணங்கி !அணிபணி குடை முதலியவைகளை அள்ளிக்கொண்டு ஓடவும்) (எதிரே தூதன் வந்து இடித்து மோதவும்) என்னப்பா இது! கன்னம் வீங்கினதும் பல்லுப் போனதும் பத்தாது என்று தொப்பையையும் சப்பையாக்கி விட்டாயே நீ இடித்த இடியிலே.

(விழுந்தெழுந்து வாரிக்கொண்டு ஓரே ஓட்டம்)

தூதன் :—இளவரசே ! வணக்கம்! யுத்த விடுதியிலே தேடினேன் தங்களைக் காணேம் இங்கு கண்டேன்.

வீர :—வா ! என்ன செய்தி ?

தூதன் :—நிருபம் அரசர்பிரானிடமிருந்து (கொடுக்கிருன்)

வீர :—எங்கே ! (வாங்கி வாசித்து விஜயேந்திரனிடம் கொடுக்கவும)

விஜ :—(பார்த்துவிட்டு) அட்படியானல் இப்பொழுதே புறப்படவேண்டியதுதான். இளவரசே பரிணயபுரத்தில் தாமதித்து விடாதீர்கள்.

வீர .:—நண்ப ! உன்னைப் பிரிவதென்றல்........!

விஜ :—எனக்கும் வருத்தமாகத்தான் இருக்கிறது கொற்றவர் ஆணை குறுக்கே நிற்கிறதே. இன்னும் இரண்டே நாட்கள் உள்ளன உங்கள் வெற்றிவிழாவுக்கு.

வீர :—ஆம் இன்னும் ஏழே நாட்கள் தான் இருக்கின்றன உன் காதல் விழாவுக்கு.

விஜ :—மறைவிலிருந்தே பார்த்துவிட்டீரா அதையும்.

வீர :—மங்கள வாழ்த்துக் கூறுகிறேன் உங்களுக்கு நண்பா ! மகிழ்ச்சி !

வீர :—இளவரசே! தாமதம்வேண்டாம் புறப்படுங்கள் பரிணயபுரத்துக்கு. தங்கள் அன்பு மனையாளோடும் ஆசைக்குழந்தையோடும் விஜயபுரிவந்து சேருங்கள் வெற்றி விழாவுக்கு. (திரும்பி) மெய்க்காப்பு வீரர்காள் உடன் செல்லுங்கள்!

(வீரர் வந்து வணங்கிநிற்க)

வீர :—நண்பா! படையை நடத்திக் கொண்டுபோ! தாமதியாமல் இரண்டேநாட்களில் வந்து விடுகிறேன் அரச நிருபத்திற் கண்டபடி.

விஜ :—வருக இளவரசே!

வீர :—வெல்க விஜயேந்த்ரா!

(மெய்க்காப்பு வீரர்கள் முன்னும் பின்னும் செல்ல விஜயேந்திரன் வணங்க வீரகுமாரன் போகிறான்)

---

## காட்சி 17

இடம்: வெற்றிவீரனின் அரண்மனை மாளிகை காலம்: காலை,

(வெற்றிவீரன் ஆலோசித்துக் கொண்டே அங்குமிங்குமாக உலவிக் கொண்டிருக்க,

நாகநாதன் :—(ஆசனத்திலிருக்கும் ஆலகாலனைப் பார்த்து) உண்மையில்லாத உலகம்.

ஆலகாலன் :—உணரும் காலம் வரும்.

சாரணன் :—(வந்து வணங்கி) வணங்குகிறேன் வேந்தே! நமது படைகள் வசந்தபுரியை விட்டுப் புறப்பட்டு விட்டன. இளவரசரை எங்கும் காணோம்.

வெற்றி :—(வியப்பு) இளவரசரை காணோமா?

சாரண :—ஆம்! கேட்டேன் பலரிடம், கேள்விக்கு விடையில்லை.

வெற்றி :—படையை நடத்துவது?

சார :—விஜயேந்திரத் தளபதி.

வேற் :—ஆஹ! மோசம் போனேன்.

சார :—அரசே! படைவீர ரெல்லாம் அவன் மகுடிக்கு ஆடும் பாம்புகளாகி விட்டனர்.

வேற் :—வந்தது நாசம். சரி நீபோ! இதற்கென்ன செய்வது? (திரும்பி) ஆலகாலரே! ஆபத்து நெருங்கு கிறதே! நாகநாதரே! நாம் இனியும் சும்மா இருந்தால்?

நாகநாதன் :—சும்மா இராமல் சோடைகளான எங்களால் என்ன செய்ய மு.யும் அரேச;

ஆலகாலன் ;—உள்ளது சொல்லிய அதியுக்தன் அடைந்த கதிதான் நல்லது செய்பவர்களுக்கு இங்கே நடக்கும்.

வேற் :—ஆஹ! அபசாரம் அபசாரம்! உற்றது கூறிய உத்தமனை சற்றும் தாமதிக்காமல் சபைக்கழைத்து வரச் செய்யுங்கள் கொற்ற மரியாதையுடன்.

ஆல :—ஏய்! யாரங்கே? விரைவாக சிறைக்கூடம் சென்று அதியுக்தனை அரச மரியாதையுடன் அழைத்து வாருஙகள்! (ஏவலர் போக)

அதியுக்தன் :—(வரவேற்புடன் வந்து) வணக்கம்!

வேற் :—(எழுந்து) உற்றது கூறிய உத்தமா வருக! ஆபத்தை அறிவித்த ஆப்தனே வருக! அதியுக்தா! நான் ஆத்திரபுத்தியால் அறிவிழந்து உனக்குச் செய்த அபராதத்தை மறந்து அங்கு நடந்த அலங்கோலங் களை ஆதியோடந்தமாக அறிவிப்பாயாக! அன்பா!

அதியுக் :—ஐயனே! தாங்கள் என்னைத் தண்டித்ததைப் பற் றியே நான் கவலைப்படவில்லை. தங்களுக்கு வரும் கெடுதலைக் குறித்துத்தான் வருந்துகிறேன். (சோகித்து) அரசே! நான் முன்னர் தெரிவித்தயாவும் உண்மையே. இதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் சீக் கிரத்தில் ஜாக்கிரதையாகச் செய்து கொள்ளப் பிரார்த்திக்கிறேன்.

வேற் :—அதியுக்தா! அவ்வாசனத்தமர்! இன்று முதல் நீ உபசேனுதிபதி.

நாக :—உயிரோடு பிழைத்திருந்தால்........

ஆல :—அப்படி என்ன சந்தேகம்?

நாக :—எதிரி முதுகுமேல் ஏறிவந்து கொண்டிருக்கிறான் எமன் போல, இங்கே பட்டம் வழங்கப்படுகிறது பட்டம்.

ஆல :—ஆம்! அன்று வழங்கிய "தளபதி" பட்டம்தான் இன்று உங்களை அடியோடழிக்கும் திட்டம்.

நாக :—ஆம்! உண்மை! முக்காலும் உண்மை. நானே என்னை அழித்துக் கொள்ள நஞ்சை வளர்த்தேன்' நல்ல பாம்புடன் பழகினேன். அருமருந்தன்ன அமைச்சர் ஆலகாலரே! நலமிக்க இராணுவ நாயக நாகநாதரே! அந்தச் சண்டாளன் வந்தது முதல் உங்கள் இருவரையும் நான் உதாசினம் செய்தேன் என்பதை ஒப்புக் கொள்கிறேன். அந்தோ! அதன் பலனை இன்று அநுபவிக்கிறேன்.

இன்னார் என்றறியாத, இனமே தெரியாத ஒருவனை, அதிலும், காட்டில் திரிந்தலைந்து காய்கனிகளைத் தின்று காலங் கழித்துவந்த சிறுவனை, கண்ணியமானவனென்று நம்பி உண்மையாளரான உங்களை, பரம்பரைத் தோழர்களான உங்களைப் பொருட்படுத்தாதது எனது அறியாமையேயாகும்.

சண்டாளன்; இவ்வாறெல்லாம் செய்ய வேண்டுமென எண்ணியே அவ்வாறு உண்மை போலவும், உரிமை போலவும் நடித்தான் போலும்! நம்பிக்கைத் ரோகி, குடியிருந்த வீட்டில் கொள்ளி சொருகும் குடிலக் கொடூரப் பாவி.

உயிர்க்குயிராயமைந்த உத்தம மித்திரர்களே! நான் உங்கள் விஷயத்திற் செய்துள்ள அசம்பாவிதங்களை எண்ணாது, என்னையும் என் தேசத்தையும் பராமரித்துப் பாதுகாப்பீராக! பிசகாத விசுவாசப் பெருந்தகையீர்! எனக்கோ செய்வது இன்னதென்று தென்படவில்லை. எனது அருமைத் திருக்குமாரன்

செயலும் கெதியும் ஏதாகியதோ தெரியவில்லை. இந் நிலையில் என்னை ஆதரிப்பது உங்கள் பொறுப்பு.

நாக :—உண்மையில்லாத உலகம்.

ஆல :—உணரும் காலம் உதயம்.

அதியுக்தன் :—அரசே ! அந்த விஜயேந்திரன்....

வெற் :—(சினந்துமறுத்து) அல்ல "விஷகேந்திரன்" அந்தப் பாதகனுடைய நாமம் என் காதுக்கு நாராசம் ! அவன் பேரை உச்சரித்து என் ஆத்திரத்தைக்கிளப்ப வேண்டாம். குடித்த மடுவைக் கடித்த கொடியன்.

நாக :—நடித்த நடிப்பில் மயங்கிவிட்டார் நமதரசர்.

ஆல :—உறவாடிக் கெடுத்துவிட்டான் உலுத்தன்.

வெற் :—வளர்த்த கடா மார்பிற் பாய்கிறது.

அதி :—இழுத்துப்போட்டு கழுத்தை அறுக்க வேண்டியது தான் !

நாக :—கழுத்தை அறுக்கக் கத்திவேண்டாமோ ?

அதி :—வேண்டும்.

நாக :—அதுதான் படையெல்லாம அவன் பக்கமென்று நீயே சொல்லி விட்டாயே. ஆதலால் நேரடி நட வடிக்கை யெடுக்கவும் வழியில்லை. (யோசித்து) ஆல காலரே ! அபாயத்திலிருந்து தப்ப ஓர் உபாயம் !

ஆல :—குறுக்கு வழிதான் காணவேண்டும். அவனை விலங்கிட்டு யுத்தக் கைதியாக அரசவையில். நிறுத் தினல்

வெற் :—யோசனை நல்ல யோசனைதான் பூனைக்கு மணி கட்டும் எலியிருந்தால்.

நாக :—எலியெதற்கு ? பூனையைப் பெற்ற பூனையே போகட்டுமே.

ஆல :—நாகநாதரே ! விபரமாகச்சொல்லும் விளங்கும்படி

நாக :—அரசே ! அவனை அடக்குவார் அவனியில் இல்லை. யாருக்கும் அவன் அடங்கவும் மாட்டான். ஆனல் அவனுடைய அன்னை

வேற் :—யார் ? தர்மாட்சியா ?

நாக :—ஆம் ! அவளுக்கு மட்டுமே அவன் அடங்குவான் அவளுக்கு இங்கு நடந்துள்ள விவகாரங்கள் ஒன்றுந் தெரியாது ஆகவே, அவளிடம் தாங்கள் ஆத்திரம் காட்டாது அடக்கமாகப்பேசி, அவளைக் கொண்டே— அவன் கைகால்களில் விலங்கு பூட்டி அழைத்து வர அரச கட்டளை யென்று கூறுவீரானல் ஒப்புக் கொள்வாள் என்று நம்புகிறேன்.

ஆல :—சபாஷ் ! நாகநாதரே ! நல்ல யோசனை.

வேற :—சரி ! அப்படியே செய்கிறேன் (திரும்பி) யாரங்கே?

சேவகன் :—(வந்து) வணக்கம் !

வேற் :—தர்மாட்சி அம்மையாரை மரியாதையாக அழைத்துவா !

சேவ :—ஆக்ஞை மகராஜ் ! (போதல்)

நாக :—தாய் தனயனுக்குப் பூட்டும் விலங்கு நமக்கு நேர இருக்கும் இன்னலைத் தடுக்கும் இருப்பு விலங்கா கடடும்.

ஆல :—நினைப்பைச் செயலாக நிறைவேற்றி வைக்கட்டும்.

தர்மாட்சி :—(வந்து அரசனை வணங்கி) அண்ணு ! அழைத் தீர்களாமே ?

வேற் :—ஆம் ! தர்மாட்சி ! உன்னிடம் ஒரு உறுதி மொழியை எதிர்பார்த்தே அழைத்தேன்.

தர்மா :—அண்ணு ! அபலையாகிய என்னிடத்தில் தாங்கள் எதிர்பார்ப்பதாகச் சொல்வானேன்? கட்டளை யிட்டி ருக்கிறேன் என்ருல் அதே எனக்கு மேன்மையைக் கொடுக்காதோ ? என்னுல் இயன்றதாயின் தடை யில்லை.

வெற் :—உன்னுல் முடியக்கூடியதுதான்.

தர்மா :—அப்படியானுல் எனது ஐயன்மீது ஆணையாக நிறைவேற்றுகிறேன்

வேற் :—(சினந்து) சதிகாரப்பாவியைப் பெற்ற சண்டாள வயிற்றை உடைய தர்மாட்சி யென்னும் கர்மகாண்ட

பிண்டமே! தாமதிக்காது சென்று, சேனுமுகப்பிலி ருக்கும் பதிதனுகிய உன்மகனை, இதோ (காட்டி) இந்தவிலங்குகளால் கால்களிலும் கைகளிலும் பூட்டி இங்கே அழைத்துவரவேண்டும் சீக்கிரம். கார ணம் கேட்காதே! போ! உம்! எடுவிலங்குகளை போ!

தர்மா :—(பதறித்துடித்து) இதென்ன நான் கனவு காண் கிறேனு? இல்லை, என்சித்தம் பித்தம் அடைந்து விட்டதா? ஆம்! அப்படித்தான் இருக்கும் இல்லை யென்ருல் நமது அருமைத் தமையனும் இவ்வாறு கடு மொழி கழறுவாரோ?

நான் இன்று வீரகுமார விஜயேந்திர வெற்றி விழா விமரிசையை யெண்ணி பெருமிதமகிழ்வடைந் திருந்ததால் என்மனமே என்னை ஏமாற்றுகிறதோ? (மருண்டு) இதென்ன திடுக்கிடும் திடீர் சம்பவம்!

வெற் :—(இறங்கி) ஏன் இன்னும் தாமதிக்கிருய்? எடு விலங் குகளை போசீக்கிரம்! காரணம் கேட்க நினைக்காதே!

தர்மா :—அண்ணு! தங்கள் கட்டளையை மீறவில்லை. என் மகன் தங்களுக்கு ஏதேனும் தவறு செய்திருந்தால் அவனை நாம் ஒரு ஏவலனை விட்டழைத்தாலும் தடை யின்றி வந்துவிடுவான். ஆதலால் அவ்விதமே செய்து அழைத்து சமூகத்தில் ஒப்புவிப்பதாக மன்ருடிக் கேட்டுக் கொள்கிறேன்.

(நாகநாதன் அரசன்காதில் ஏதோ சொல்லவும்)

வெற் :—வேண்டேன் அவ்விதம். நான் கூறியவண்ணம் செய்து கூட்டிவருகிருயா இல்லையா? எடுவிலங்கு களை! போ சீக்கிரம்!

தர்மா :—மன்னிக்கவேண்டும்! காரணம் கேட்கவேண்டா மென்று இட்ட கட்டளையை மீறவியலாது கலங்கு கிறேன். அண்ணு! சமூக உத்திரவுபோல நானே போய் அழைத்துவருகிறேன். ஆனுல், என்கையால்

விலங்குபூட்டிக் கூட்டிவருவது என்ற கட்டளையை மட்டும் மீட்டுக் கொள்ளப் பிரார்த்திக்கிறேன் ப்ரபு!

வேற் :—நான் தெரிவித்தப்படியே செய்து அழைத்து வருகிருயா! என்கட்டளையையும் உன் உறுதி மொழியையும் மீறுகிருயா? என்ன சொல்லுகிருய்?

தர்மா :—(ஏங்கிமண்டியிட்டு) அண்ணலே! மன்னிக்க வேண்டும்! விலங்கில்லாமலேயே அழைத்துவந்து விடுகிறேனே!

வேற் :—நான் சொன்னபடி செய்கிருயா இல்லையா? இனியும் மறுவார்த்தை பேசுவாயானல்'அது என்வ'த்தையைமறுப்பதாகும். எடுவிலங்குகளை! போ சீக்கிரம்! கணப் போதும் இனி தாமதிப்பாயானல் என் கட்டளையையும் உன்கடமையையும் கடந்ததாகவே கருதப்படுவாய் போ சீக்கிரம்!

தர்மா :—போகிறேன். அண்ணு! போகிறேன் தங்கள் வார்த்தைக்கு மறுவார்த்தையில்லை. வாதாடியதற்காக மன்னிக்க வேண்டும்! கொற்றவர் ஆணையை நிறைவேற்றச் சற்றும் தயங்க மாட்டேன், என்ருலும் பெற்ற வயிறு.....

வேற் :—பற்றி யெரியத்தான் செய்கிறது எனக்கும். ஆசைக் கொருமகன், அன்பு செய்யும் திருமகன் அவனைச் சிறைப் பிடித்து என்னையும் மடிக்கவரும் உன் மகனுக்காக அழுகிருயே! நினைத்துப் பார்! "நிரபராதி" என்மகன் அவனுக்கு உன்மகன் இழைத்த கொடுமையை விட இது கொடுமையா? உண்ட வீட்டுக்கு இரண்டகம் செய்த குண்டகனைப் பெற்ற மண்டோதரியே போ! போ! நில்லாதே போ!

(நீர் வடியும் கண்களுடன் ஏங்கிச் செல்கிருள் தர்மாட்சி)

நாக :—வேந்தே வருந்தாதீர்!

ஆல :—வீழ்ந்தான் விரோதி.

———

## காட்சி 18

இடம்: படைகள் தங்கும் கூடாரம். காலம்: முற்பகல்.

இருப்போர்: வீரர்கள் உபசேனைத்தலைவர்கள்
(உலவிய படியே சுற்றுமுற்றும் பார்த்து கவனித்து)

விஜயேந்திரன் :—(சிந்தனையோடு) என்ன இது! விஜயபுரி எல்லைக் காட்டிற்கு வந்துவிட்டோம். எந்தவித ஆர வாரத்தையும் காணோம், வரவேற்பு விழாவின் வைப வங்கள் இல்லை. பொலிவிழந்து கிடக்கிறது நாடு. ஒன்றும் விளங்கவில்லையே (உற்று நோக்கப் பார்த்து) யாரது! (நன்கு நோக்கி) என் தாய்போல் தெரிகிறதே. (தெளிந்து) ஆம்! நம் தாய்தான் வருகிறார்கள்.

(தர்மாட்சியும் ஒரு சேவகனும் வருகிறார்கள்)

(எதிர்சென்று) அம்மா!

தர்மாட்சி :—மகனே! (ஒருவரை யொருவர் கட்டிக்கொண்டு பிறகு) விஜயேந்த்ரா! இது நிஜந்தானா?

விஜ :—ஆம் அம்மா! உண்மைதான் முழுவெற்றி. இனி வீரர் வரிசையில் எனக்கும் இடமுண்டு. வசந்த நாடும் நமது விஜயபுரி சாம்ராஜ்யத்துக்கு உட்பட் டதுதான். (பார்த்து) வெற்றி பெற்று வந்துள்ள மக னுக்கு வீரத்தாயின் பரிசு என்னம்மா? வீரக்கழலா? வெற்றிமாலையா? (பார்த்து) கையில் உள்ளது எனக் குக் கொண்டு வந்ததுதானே அம்மா? எங்கே?

தர்மா :—(சேலையால் மறைத்திருந்த கையை மறைத்து) அப்பா! (கண்கலங்கி வருத்தந் தோன்ற) அப்பா!

விஜயே:—(பார்த்து) ஏனம்மா கண்ணீர் விடுகிறீர்கள்? அம்மா! என் இதயம் கலங்குகிறது. சொல்லுங்கள்! என்னம்மா காரணம்? (என்று கைகளைப் பிடித்துக் கேட்கும் போது, கையிலிருந்த விலங்குகளைப். பார்த்து பிரமித்து)

எதற்கம்மா இந்தச் சங்கிலிகள்?

தர்மா :—(ஏங்கி விம்மித் தவித்து) எப்படியடா சொல்வேன்? என் உள்ளமே உடைந்து விடும்போல் இருக்கிறதே அப்பா !

விஜயே :—சொல்லுங்களம்மா சோர்வடையாமல்.

தர்மா :—துக்கம் தொண்டையையடைக்கிறதே ! கண்ணே விஜயேந்தரா ! வீரகுமாரன் எங்கே?

விஜ :—பரிணயபுரம் போயிருக்கிறாரம்மா.

தர்மா :—உண்மையாகவா ?

விஜ :—என்னம்மா ! நான் என்றுவது பொய் சொன்னதுண்டா ? (முகத்தைப் பார்த்து) ஏனம்மா அழுகிறீர்கள் ? நேர்ந்தது என்ன தாயே?

தர்மா :—களம் சென்று வெற்றிகண்ட கண்மணி மகனைப் பாராட்டிக் கட்டித் தழுவ வேண்டிய கரங்களால் கடு விலங்கு பூட்ட வந்திருககிறேனப்பா காடு தேடி.

விஜ :—(விதிர்விதிர்த்து) காரணம்?

தர்மா :—வேந்தன் கட்டளையடா மகனே !

விஜ :—விபரீதம் அம்மா இது. ஒரு குற்றமுமறியாத ஒருவனுக்கு பெற்றதாய் விலங்கு பூட்டுவதா? இது வேந்தன் கட்டளையா? என்ன நியாயம்? அம்மா ! வேந்தனும் வேந்தன் ! ஆய்ந்தோய்ந்து பாராத மாந்தரில் மடையனுக்குப் பேர் வேந்தன். நன்றிகொன்ற நயவஞ்சகன். அம்மா ! விலகுங்கள் ! இப்போதே போய் அந்தக் கண்மூடிப் பார்த்திபனைப் படுசூரணமாக்கி வருகிறேன். என் தாயை ஏளனத்துக்குரிய நிலைக்கு ஆளாக்கியவன் எவனுயினும் சரி ! எமனுலகனுப்புகிறேன்.

தர்மா :—மகனே ! பொறு !

விஜ :—ஏனம்மா பொறுமை? மானம் பறிபோகும் வேளையில் பொறுமை? வளமான வாழ்விலே வஞ்சனை தனது கோரக்கரத்தை நீட்டும் வேலையிலே பொறு

மையாம் பொறுமை; இல்லை. இதோ "புயல்" புல்லர் கூட்டத்தைப் பொசுக்கியே தீருவேன். பொசுங் கட்டும் புன்மை. பெற்றதாயே! வெற்றுடம் பாக்கா தீர் என்னை தட்டிக் கொடுத்தனுப்புங்கள்! தடை செய்யாதீர்! உமது மகன் வஞ்சகநெஞ்சினன் அல்ல. வெஞ்சமருக்கும் அஞ்சாத வீரன். (உடைவாளை உருவிப்பாயப் புறப்படல்) (உடனே விரைவாகப் பிடித்துநிறுத்தி)

தர்மா :—(தடுத்து) பொறு! மகனே! என்ன காரியம்செய்யத் துணிகிறாய்? நம் குருநாதர் கட்டளை

மறைவு ஒலி : "இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர் நாண
நன்னயம் செய்து விடல்"

"தீமை செய்தோர்க்கும் நன்மைசெய்!"

"பிறர்க்கிடைஞ்சலின்றி வாழப் பழகு!"

விஜ :—(தலையிலடித்து நெற்றியைத் தாங்கிப் பிடித்துக் கொண்டு) ஆஹா! கட்டளையை நினைவுறுத்திக் கையைக்கட்டி விட்டீர்களே அம்மா! குருநாதர் வாக்கை நினைவூட்டி என்வாளை வெறும் வாழைப் பட்டையாக்கி விட்டீர்கள் தாயே! (வாளை யெறிந்துவிட்டு] இதோ பூட்டுங்களம்மா விலங்கை.

தர்மா :—விஜயேந்த்ரா! களம் சென்று வெற்றிகண்ட காளையைப் பெற்றோர் அன்போடு உபசரித்து வரவேற்பர். வீரனைப் பெற்ற பெருமிதத்தால் விம்மும் அவர்கள் உள்ளம். விதவிதமான பரிசுகள் வழங்கி வெற்றிவிழாக் கொண்டாடுவர். வீரக்கடகங்களைக் கரத்தில் அணிந்து, வெற்றிமாலையைக் கழுத்தில் சூட்டி, விருதுகள் புனைந்து மகிழ்வர்.

பெரும்பாவியாகிய என் வயிற்றிற் பிறந்ததினால் அல்லவா வெற்றி கண்ட நீ கண்டது விலங்கு. அரும் பொற்காப்புப் பூட்டி அகமகிழ வேண்டிய நான், கரும் பொற் காப்புகளோடு வந்து கைகால்களிற் பூட்டி கடுகியழைத்துப் போக காத்திருக்கிறேனடா கண்ணே!

கொஞ்சுங் குழந்தைப்பருவக் குஞ்சுக்கைக ளிலே கோலவளைகள் அணிந்து கோலடிக்கப் பார்க்க வில்லையடா கோமகனே!

கைலாகு கொடுத்து கனிவோடு கூட்டிப் போக வேண்டிய இந்தக் கரங்களால், கயவர்களைப் பிணிக் கும் இருப்புச் சங்கலிகளால் உன்னைக் கட்டிப்போக வந்திருக்கிறேனடா கன்னெஞ்சத் தாயாகிய நான். (கண்ணீர் ஒழுக) ஆஹ்!! நினைக்கக் குமுறுகிறதே நெஞ்சம் (ஏங்கி மேனேக்கி)

கடவுளே! நீ இறந்து விட்டாயா? இல்லை இல்லை. இருந்தால்தானே இறக்கப் போகிறாய்? நீ இருப்பது உண்மையானல்,

நீதியும், நேர்மையும் நிரந்தர சர்வ சக்தியுமுள்ள நீ இருப்பது உண்மையானல்,

எங்கும் வியாபித்து நீ இருப்பது உண்மை யானல் உலகத்திலே இத்தகைய கிட்டூரங்கள் நிக ழுமா? நிகழ்த்தத்தான் இயலுமா?

நீ இருந்தாலும் இல்லாவிட்டாலும் இகத்திலே "இன்ப துன்பம" "ஏற்றத் வாழ்வு" "நன்மை தீமை" "நீதி அநீதி" "கிரமம் அக்கிரமம்" "வெற்றி தோல்வி" எனும் பாகுபாடுகளும் அவை கட்கான பண்பாடுகளும் இருந்து கொண்டுதான் இருக்குமென்றால் உன்னைப் பற்றி நினைப்பதோ பேசு வதோ நேரக் கொலைதானு? "காசினியில் யாரோ கட்டிவிட்ட கற்பனைப் பெயர்தான் போலும் கடவுள் என்பது" என்று கருதவேண்டிய சூழ்நிலையில் என்னைக் கொண்டுபோய் நிறுத்தியிருக்கிறது எனது காலகதி (பார்த்து) ஐயோ! என் அருந்தவச் செல்வமே!

விஜ:—(நெருங்கி) அம்மா! அழுவதால் பயனில்லை. வஞ் சனை வெல்கிறது. தாயே! என்றாவது ஒருநாள் வஞ் சனை வீழத்தான் வேண்டும். உண்மைக்கு அழி வில்லை. நேர்மைக்கு மேன்மை உண்டு. அம்மா!

வருந்த வேண்டாம்! இதோ நீட்டுகிறேன் கைகளை பூட்டுங்கள் விலங்கை. கூட்டிப் போங்கள் அந்தக் காட்டுமிராண்டிக் காவலனிடம்.

தர்மா :—ஆருயிர்க் கொழுந்தே! உன்கைகளிலா!

விஜ :—அம்மா! கலங்க வேண்டாம்! விலங்கைப் பூட்டுங்கள்!

தர்மா :—கண்ணே! நான் எத்தகைய விசாரத்தோடு இருந்தாலும், அத்தனையும் பானுவைக்கண்ட பனிபோல் பறக்க, பரிந்து கவிழ்ந்து தவழ்ந்து வந்து எனது மடியைப் பற்றியிழுத்து மகிழ்வித்த உனது மணிக் கைகளிலே.

அம்மா! என்று அமுதமொழுக அன்பு ததும்ப குமுதச் செவ்விதழ்குவிந்த வாயினாற் கூவிக்கொண்டு ஓடிவந்து, அணைத்தமுதருந்தி, பசிவந்த போது பாலொழுகும் பந்துபோன்ற பனிமலர்க் குவடுகளைச் சுழித்து செல்வச் சிணுங்காட்டி, "பக்தர்கள் பாரதத் தாயை பசியசெந்தாமரை மலர்களால் அர்ச்சித்துப் பஜிப்பது போன்று" எனது கன்னங்களிலும் புயங்களிலும் மொத்தி மொத்தி எனக்கு இன்பத்தை வளரச் செய்த நினது அம்புயக் கைகளிலே

சர்வ சாஸ்திரங்களையும் கற்று களங்கமறத் தெளிந்து கருத்துள் வைக்கவேண்டி புஸ்தகங்களையே ஹஸ்தபூஷணமாகக் கொண்டிருந்த நினது புனித கைகளிலே

சகல அரசர்களையும் புறமுதுகிடப் போராடி, திக்விஜப ஜெயக்கொடி நாட்ட, வசந்த நாட்டதிபனான மகாமன்னன் இராஜராஜக்கிரீடனை முறியடித்து வெற்றி கொண்ட வீரவாளைத் தாங்கிய நினது மின்னெழிற்கைகளிலே

(விலங்குகளையெடுத்து கலங்கிச் சோர்ந்து)

உலகத்திலே உத்தமர்கட்கு வேண்டிய சத்தியம், தர்மம், தயை, சாத்வீகம், வாய்மை, அறிவு,

அடக்கம், ஆண்மை, அஹிம்சை என்ற சத்வ லட்சணங்கள்யாவும், கணமும் உன்னை விட்டகலாதிருக்க அவைகளைப் பூட்டுகிறேன் இந்த விலங்குகளால்.

(என்று சோர்ந்து தவித்தபடியே பூட்டுகிறாள். விஜயேந்திரன் பணிவுடன் நிற்கிறான். அவன்முன் மண்டியிட்டு அவன் கால்களில் விலங்குபூட்ட எத்தனிக்கவும் தடுத்து நிறுத்தி.)

விஜ:—அம்மா! என்பாதங்களைத் தாங்கள் தீண்டவேண்டாம். கொடுங்கள் விலங்கை, நானே என் கால்களில் பூட்டிக் கொள்கிறேன் இதற்காக என்பாதங்களைத் தாங்கள் தொடவேண்டாம் தாயே! (விலகல்)

தர்மா:—செல்வமே' அரச கட்டளை அப்படியல்ல. அப்பனே! நான் பெற்றுவளர்த்த பாதங்கள். நான் சுமந்த பாதங்கள், நான் வருடிய பாதங்கள், நான் முத்தமிட்ட பாதங்கள். என்மேல் நடந்த பாதங்கள், என்னை உதைத்து உதைத்து என் இதயத்தைக் குளிர வைத்த உனது பாதங்களை நான் தொடுவதால் உனக்கும் எனக்கும் யாதொரு தோஷமும் ஏற்படாது கண்ணே! அருகில்வா! (விஜயேந்திரன் நெருங்கவும்)

சற்ஜன சமூகத்துக்கு உரியவைகளான; மதியாதார் வாசல் மதித் தொருகால் மிதியாமை, அறவழி கடவாமை, சத்தியத்தைத் தாண்டாமை, சமரிற் பின்னிடையாமை, ஆகிய நன்னடக்கைகள் உன்பாதங்களை விட்டு எப்போதும் விலகாதிருக்க அவைகளைப் பூட்டுகிறேன் இந்த விலங்குகளால்.

தக்க வெற்றியையடைந்து தரணிபோற்ற நிற்கும் மக்களிற் சிறந்த மாணிக்கமாகிய உனக்குப் பூட்டுகிறேன் இந்த மறியற்கண்டாமணியை.

ஆஹ்! மகனே! (அலறி மூர்ச்சையாகிறாள்)

விஜ:—அம்மா! (விலங்குகளோடு தாங்கிப் பிடிக்கிறான்)

—

## காட்சி 19

இடம்: வெற்றிவீர அரசவை. காலம்: பகல்.

(அரசன் முதல் அனைவரும் முறையே அமர்ந்து பேசிக்கொண்டிருக்கின்றனர்.)

ஆலகாலன்:—அரசே! நமது "தளபதி" நாகநாதர் தெரிவித்தபடி, அந்தப் பாதகன் விஜயேந்திரன் வந்தவுடன் பொங்கியெழும் கோபாக்கினியை மட்டு மீறவிடாமல் சற்று சாந்தப்படுத்திக் கொண்டு நமது இளவரசர் தகவல் என்ன என்பதை அவன் வாயிலிருந்து தந்திரமாக வரவழைதது்த் தெரிந்த பிறகே அவனைத் தண்டிக்க முற்படவேண்டும். அப்படியில்லாமல் ஆரம்பத்திலேயே கண்டிக்கத் தொடங்கினால் நமது யுவராஜரின் கதியை அறிவது கடினமாகிவிடும். என்றாலும் அவனும் இலேசில் தெரிவித்துவிட மாட்டான். அவனைத் தக்க தேகவாதை செய்தேனும் உண்மையை அறிந்தபின்பே அவனைத் தங்கள் நோக்கம் போல

நாக:— சிரச்சேதமோ, தூக்குத் தண்டனையோ ஏதோ ஆக்கினைகளைச் செய்ய வேண்டுமென்பது எமது அபிப்பிராயம்.

வெற்:—சரி!

(கால்களிலும் கைகளிலும் விலங்கிடப்பட்டு நீண்ட சங்கிலிகளால் இருசேவகர்கள் பின்னால் பிடித்துக் கொண்டும் உருவிய கத்திகளுடைய வீரர்களுடனும் விஜயேந்திரன் வருகிறான் கண்டதும் வெற்றிவீரன் துடிதுடித்து வாளை உருவ, ஆலகாலன் உடனே கத்தி வெளிவருமுன் தடுக்க.)

வெற்:—(அமர்ந்துபார்த்து) அடே! நான் உன்னுடன் கூட அனுப்பியிருந்த என் மகன் வீரகுமாரன் எங்கே?

விஜ:—தங்கள் திருமுக நிருபத்திற் குறித்தபடியே சென்றிருக்கிறார்.

வெற் :—ஆ! என்ன? திருமுகமா? நான் எழுதியதா? யாருக்கு அனுப்பிய நிருபத்தில்?

விஜ :—தாங்கள், இளவரசருக்கும் எனக்கும் அனுப்பி யிருந்த நிருபத்தில்.

வெற் :—(சினமிகுந்து) படுமோசப் பொய்மழை பொழியும் பாதகா! (எழுந்துநின்று) இதென்ன கட்டுக்கதை! நாணுவது இவர்களுக்கு நிருபம் எழுதியதாவது! (திரும்பி) பொய்! பொய்! பச்சைப் பொய்!

நாகநாதன் :—திடீர்ப்புழுகில் கைதேர்ந்த திருட்டுப்பயல்.

வெற் :—திருமுகம் தீட்டினேனும் திருமுகம்.

நாக :—விழித்திருக்கும் போதே வெடிவீசுகிறான் வீணன்.

வெற்றி :—எங்கே அந்தத் திருமுகம்?

(நாகநாதனுக்கு இந்தக் கேள்வி அச்சக்குறி யுண்டாக்குகிறது)

விஜ :—இளவரசரிடத்தில் இருக்கிறது.

நாக :—பொய்யைப் புதுமுறையில் பேசுகிறான் ப்ரபு!

வெற் :—அடே வேண்டாம் வீண்பிதற்றல். உண்மை யைச் சொல்லிவிடு! என்மகன் எங்கே?

விஜ :—தங்கள் ஆக்ஞைப் படி.

வெற் :—மீண்டுமா அதையே சொல்லுகிறாய்? வேண்டாம் பிடிவாதம். நீ செய்து கொண்டுவந்துள்ள பொய்ப் பாடத்தை மறந்து மெய்ப் பதிலைக் கூறு! என் மகனெங்கே?

விஜ :—தங்கள் திருமுக நிருப உத்தரவிற் கண்டபடியே இளவரசர் பரிணயபுரம் சென்றிருக்கிறார் இது மெய்.

வெற் :—என் உத்தரவுப்படியா? உம் ம் ம்!! (பற்களைக் கடித்துத் துடித்து) என்ன சாமர்த்தியம்! என்ன தைரியம்! இன்னும் விழுங்குகிறான் சண்டாளன். (திரும்பி விழித்து) அடே! உள்ளதைச் சொல்லு கிறாயா? அல்லது (எழுகிறார்)

ஆலகா :—(நெருங்கித் தடுத்து) ப்ரபு! சற்றுப் பொறுத்து வினவ வேண்டுகிறேன். மேலும், இளவரசர் நமது சம்பந்தபுரமாகிய பரிணயபுரத்துக்கே சென்றிருப்ப தாகச் சொல்வதால் அங்கு ஒரு தூதனை அனுப்பி அறிந்துவரச் சொல்லலாமென எண்ணுகிறேன்.

நாக :—ஆம் மகாராஜா! அந்தச் சந்தேகமும் தீர்ந்து கொள்ளலாம்.

விஜ :—அவரே இரண்டு நாட்களில் வந்து விடுவதாகச் சொன்னார்.

நாக :—இரண்டு நாட்கள் இன்னும் பொறுப்பதா?

வேற் :—அதியுக்தா! பரிணயபுரம் சென்று பதிலுடன் வா!

(அதியுக்தன் வணங்கிப் போகவும்)

அதுவரை இந்தக் கிராதகனை அந்தரங்கச் சிறையில் அடைத்து வையுங்கள்!

(கொண்டு போகிறார்கள்)

———

## காட்சி 20

இடம் : காட்டுப்பாதை. காலம் : நள்ளிரவு

(மெய்க்காப்பாளர் நடுவே வீரகுமாரன் வருகை)

மெய்க்காப்பாளன் :—(திரும்பித் திடீரென வீரகுமாரன் நெஞ்சுமுன் கத்தியை நீட்டி) நில் நகராதே!

(அதேநேரத்தில் மற்றொருவன் வீரகுமாரனின் வாளைப்பறித்தல்)

மெய் :—(சிரிப்பு) அஹ்ஹஹ்ஹா! இளவரசரே! நீர் இப்போது "இழவரசர்" நான் விரும்பினால் நீர் இழவுக்கு அரசராகி மறுகணமே மண்மூடிப்போகும் கண்மூடிச் சாமியாகிவிடுவீர்.

(ஏளனச் சிரிப்புச் சிரித்தல்) (எல்லோரும் எதிரொலிச் சிரிப்பு)

வீர :—என்ன இது? உண்டவீட்டுக் கிரண்டகமா?

மெய் :—அது உபயோகமற்ற உலகநீதி.

வீர :—வேலிக்கு இட்டமுள் காலுக்கு....

மெய் :—ஏட்டுச் சுரைக்காய் கூட்டுக்கு உதவாது அப்பனே !

வீர :—போராடவலுவில்லை, வீரமில்லை, வாய்ப் பேச்சிக்குக் குறைவில்லை.

மெய் :—கத்திமுனை உன் கழுத்து முன்னே.

வீர :—செத்த சவம் எங்காவது கிடந்தால் போய்ச் செய் வது தானே யுத்தம்.

மெய் i :—உயிரிழக்காதே !

மெய் ii :—ஒங்கிப் பேசாதே ! (சீட்டி யடித்தல்) (முகமூடி யிட்ட கூட்டம் வர)

இவனை நமது மலைக்குகைச் சிறையிலடைத்து வையுங்கள் ! (வீரகுமாரனை இழுத்துப் போகிறார்கள்)

இனி உதவி சேனாதிபதி பதவி எனக்குத்தான். உயர்ந்த பதவி வேண்டுமானால் இதுதான் சுருக்க வழி. (திரும்பி) டேய் ! நீ ஓடி நமது தளபதி நாக நாதரைக் கண்டு சொன்னபடியே வீரகுமாரனை சுரங் கக் குகையில் அடைத்து வைத்திருப்பதாகத் தெரி வித்து வா ! (ஒருவன் ஓடுகிறான்)

——

## காட்சி 20

இடம்: சிறைக்கூடம். காலம்: பிற்பகல்.

(சிறைக்கம்பிக் கதவு பூட்டிடப்பட்டிருக்கிறது. உள்ளே விஜயேந்திரன் உட்கார்ந்திருக்கிருன்.)

நாகநாதன்: —(வந்துகொண்டே) உண்மையில்லாத உலகம்.

ஆலகாலன்:—(பின்னல் வந்து கொண்டே) உணரும் காலம் வரும்.

நாக — நீங்கள் எப்படி வந்தீர்கள்?

ஆல:—வராமலிருக்க முடியுமா? நமது வீர தீர சண்டப்ர சண்ட பிரதம சேனதிபதி விஜயேந்திரருக்கு ஆறுதல் கூறுவதுடன், மின்னமல் இடித்த இடிபோன்ற விபரீதத்தைத் தடுத்து விமோசனம் தேடலாமென்றே வந்தேன் தனியாக உங்களிடம்கூட சொல்லிக் கொள்ளாமல். சரி நீங்கள் எங்கே வந்தீர்கள்?

நாகநாத:—அதற்காகவே நானும் வந்தேன் உங்களிடமும் சொல்லி உங்களையும் அழைத்து வரலாமென்ருல் காலதாமதமாகி காரியம் மிஞ்சிவிடுமெனக் கருதி உடனே தனியாக ஓடோடியும் வந்தேன் உயிர்த் தோழனுக்கு உதவ.

ஆலகா:—ஆஹாஹா! என்ன வாஞ்சை! உண்மை அன்பின் உயர்வே உயர்வு. நாகநாதரே!

"உடுக்கை யிழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதே நட்பு"

என்ருர் தெய்வப்புலவர்.

அதன்படி ஆலசியமின்றி ஆபத்தில் உதவ அணுகியுள்ள அரியகுணநல பரோபகாரப் பெருந்தன்மையைப் பாராட்டுகிறேன்.

நாக:—சரிசரி! அந்தப் பாராட்டுதலில் தாங்களும் பங்கு கொண்டுவிட்டீர்களே! என்னே அந்தரங்க நட்பின்

ஆக்கம்! ஒய்வு ஒழிவு இன்றி சதா அரசாங்க வேலை களில் ஈடுபட்டு அல்லும் பகலும் அறுபது நாழிகை யும் ஆலைபோல் சுழன்று உழைத்துவரும் அதிஉன் னத மகா மாட்சிமை தங்கிய பிரதம மந்திரியாகிய தாங்கள் உற்றதோழனுக்கு உதவ வேண்டுமென்கிற ஒரே இலட்சியத்துக்காக கால் நடையாய் கடுகிவந் துள்ளதைக் கவனித்தால் அடடாடா!

ஆல :—ஆட்சேபணை யென்ன? விஜயேந்திரன் விஷய மென்றால், "எள்" என்று சொல்லும் முன் எண் ணெய் என்றுக்க தயாராக இருப்பேனே அப்படியி ருக்க ஆருயிர் விஜயேந்திரனுக்கு ஆபத்து என்று அறிந்தும்

நாக :—ஆமாமாமாமா! நாம் சும்மா இருக்க முடியுமா? ஒழித்துக் கட்டியாக வேண்டுமல்லவா? (திரும்பி) (நடந்து நெருங்கி பார்த்து) விஜயேந்திரா!

விஜ :—வணக்கம்! பெரியவர்களே! தாங்கள் இவ்விடம் சந்தித்துப் பேசிக் கொண்ட அனைத்தையும் கேட் டுக் கொண்டுதான் இருந்தேன். நீங்கள் இருவரும் என்மேல் வைத்துள்ள அபிமானத்துக்கும் அநுதா பத்துக்கும் நன்றி!

நாக :—நடந்தது நடந்துவிட்டது—.

ஆல :—கடந்ததை யெண்ணிக் கவலைப்படாது உடனே காரியத்தில் கவனம் செலுத்துவதே உசிதம்.

நாக :—ஆம்! சாம்ராஜ்யத் தளகர்த்தராயிருந்து தன்னுயி ரைத் திரணமாக மதித்து சமராடி சகலரையும் ஜெயித்து திக்விஜயம் செய்துவரும் தீரபுருஷ சிங்க மாகிய நீர் "தலகர்த்தராக" அதாவது, அரசர் ஆக விரும்பி இராஜபீடததை அபேட்சித்தது தனிமனித உணர்ச்சிக்கு அப்பாற்பட்டதல்ல.

ஆல :—காற்றுள்ள போதே தூற்றிக்கொள்வது தவறாகுமா?

நாக :—சாதாரணமாக மனிதனை உயர்த்துவதும் அயர்த்துவதும் சந்தர்ப்பம் தான். நீர் சந்தர்ப்பத்தைச் சாதகமாக்கிக் கொண்டதில் தவறில்லை. ஆனால் சந்தர்ப்பம் அசந்தர்ப்பமாக மாறிவிட்டது. நடக்குமென்று எண்ணாதது நடந்து விட்டது சிறைக்கூடம்வரை.

ஆல :—தவக்கூடத்திலிருந்து அவைக்கூடம் அடைந்து தற்போது சிறைக்கூடம்வரை வந்துள்ளது அசந்தர்ப்பம் தானே ! ஆம் ! சந்தர்ப்ப பேதம்.

நாக :—வைத்தகுறி எல்லாமே வாய்த்துவிடுமா ?

ஆல :—வாய்க்காததற்காக வருந்தி நிற்கலாமா ?

நாக :—வருந்துவது கூடாது, வாய்க்காத குறியை அடைய மண்டியிட்டு வளைத்து எய்தால் வாய்க்காமல் போகாது. அதுபோல நீர் வீரகுமாரனைச் சிறைப் பிடித்து வெற்றிவீரனைமடித்து வேந்தன் ஆகும் விரதத்தை முடித்துக்கொள்ள இடையே தடையாக நேர்ந்துவிட்ட இந்த மறியற்கூடச் சிக்கலை எடுத்து விடுகிறோம்.

ஆல :—அதாவது உம்மை இந்தச் சிறைச்சாலையிலிருந்து வெளியேற்றி விடுகிறோம்.

நாக :—நீர் விடுதலையாகி வெளிச்சென்று ஏற்கெனவே சித்தம் செய்துள்ள திட்டப்படி நடத்தி ஜெயம் பெறுவீராக !

ஆல :—ஆனால் ஒன்றுமட்டும் ஞாபகப்படுத்துகிறோம். நீர் இராஜாவாகஆனபிறகு அமைக்கும் மந்திரிசபையில் எங்களுக்கும் பதவிகள் வேண்டும். அவ்வளவு தான்.

நாக :—யார் ஆண்டா லென்ன ? எவர்மாண்டா லென்ன ? எங்களுக்கு வேண்டியது பட்டம் பதவிகள்தான். மற்றவைகளைப்பற்றி கவலையேயில்லை.

விஜ :—போதும் நிறுத்துங்கள் உங்களின் போலிவேட "மாய்மால" புன்மொழிகளை. நான் இப்போது

எனக்கு நேர்ந்துள்ள இந்த இன்னல் இயற்கையாக நேர்ந்ததென்று இதுவரையும் எண்ணியிருந்தேன்; இதிலிருந்து.....

ஆல :—என்ன தெரிந்துவிட்டீர் புதிதாக.

விஜ :—பதவி மோகங் கொண்ட பொறாமைப் பொக்கிஷங்களான உங்கள் சூழ்ச்சியால் நிகழ்ந்த தீங்காக இருக்கலாமோ எனவும் சந்தேகப்படுகிறேன்.

நாக :—சந்தேகமே வேண்டாம் எங்கள் மேலே.

ஆல :—இதிலென்ன சந்தேகம்?

நாக :—ஏதோ ஒருநாளாவது என்னுடைய ஸ்தானத்தில் இருந்த நீர் தண்டனையடைந்தால் அந்த ஸ்தானத்துக்கும் அகௌரவம் நேருமே யென்றும், பதவிக்கு வந்தபிறகு எனக்குச் சிறிது ஓய்வு கொடுத்துவந்தவராயிற்றேயென்றும் நினைத்து எதுவோ நம்மால் இறன்ற உதவி செய்யலாமென்று முன்வந்தால் எங்கள் மேலேயே சந்தேகங் கொள்ள ஆரம்பித்துவிட்டீர். சரி அதெல்லாமிருக்கட்டும், சிறைக்கதவைத் திறந்து விடுகிறேன் திரும்பிப்பாராமல் ஓடிவிடும்!

விஜ :—(கோபச்சிரிப்புடன்) அப்படி அயோக்கியத்தனமாக திருட்டு வழியில் ஓடுபவன் நானல்ல. அப்படியே ஓடினும் நான் இந்த இடத்தைவிட்டு ஓடிவிடலாமே யொழிய என்மேல் சுமத்தப்பட்டிருக்கும் அபாண்டப்பழி என்னைவிட்டு ஓடிவிடாது. நான் உயிரைக்காக்க மட்டும் வாழ்பவனல்ல, உண்மையைக் காக்கவும் வாழ்பவன். உண்ட வீட்டுக்கிரண்டகம் செய்யும் குண்டகனல்ல நான். கொண்ட கொள்கைக்காக மண்டையோட்டையும் வழங்கும் வண்மையுடைய பண்டைப் பெருமைபடைத்த தண்டமிழ் மரபினன் நான். பட்டம் பதவிகளுக்காக பஞ்சமா பாதகம் மட்டுமன்றி தசமகாபாதகங்களையும் தாராளமாகச் செய்யத் துணியும் பேராசை வெறி பிடித்த பேடிகளின் கூட்டத்தைச் சேர்ந்தவனல்ல நான்.

இட்ட வேலையை என்னால் இயன்றவரை இதயசாட்சி யாக நிறைவேற்றி, கடமையைச் செய்வதில் நேரும் கஷ்ட நஷ்டங்களையே பிரதிபலனாக ஏற்று நாட்டுக்கு நன்மைபுரியும் நல்லபதவி ஒன்றையே விரும்புபவன் நான்.

மேலும், உங்கள் சொற்படி ஓடிவிடுவேனேயா னால் உண்மையில் இளவரசர் வீரகுமாரரைச்சிறைப் படுத்தியது நானே யென்று உறுதிப்பட்டுவிடும். செய்யாத வினையைச் செய்ததாக ஒப்புக் கொள்ளும் தீயவழியைத் திறந்துவிடும் பரோபகாரிகளே! உங் களுக்கு மீண்டும் வணக்கம்! தாங்கள் போய் வர லாம்!

ஆல :—விநாசகாலே விபரீதபுத்தி.

நாக :—வேண்டாம் பிடிவாதம் ¡

விஜ :—போங்கள்! போதும் உங்கள் போதம்.

நாக :—வீணாய்த் தடுக்காதே.

விஜ :-உஸ்ஸ் போங்கள் ஐயா!

ஆல :—சொல்வதைக் கேள்!

விஜ :—போம் ஐயா!

ஆல :—பொறு பொறு! பதறாத காரியம் சிதறாது.

விஜ :—போங்களடாபொக்கிப்பயல்களா! (உள்ளே போய் விடல்)

ஆல :—அடாவா? பார்த்தீரா நாகநாதரே! ஐயா விலி ருந்து அடாவுக்கு வந்து விட்டான் பொடிப்பயல். என்ன திமிர்! நல்லது செய்ய வந்த நம்மை

நாக :—நாய் போல் பாய்கிறான்.

ஆல :—குட்டிநாய் குரைக்கத்தானே செய்யும்.

நாக :—உண்மையில்லாத உலகம்.

ஆல :—உணரும் காலம் சமீபம். (இருவரும் போகிறார்கள்)

——

## காட்சி 22

இடம்: அரசவை காலம்: பகல்

(வெற்றிவீரன், ஆலகாலன், நாகநாதன் முதலியோர் வீற்றிருக்க வேகமாக வந்துவணங்கி)

அதியுக்தன் :—அரசே! இளவரசர் அங்கே இல்லை. இதோ பரிணயபுரத்தரசரின் பதில் நிருபம்.

வெற்றி :—(வாங்கிப்பார்த்துச் சினமாக நிமிர்ந்து) கொண்டு வாருங்கள் அந்தக் கொடியனை. (சேவன் வணங்கிச் (செல்ல) (விலங்குகளுடன் விஜயேந்திரன் வரவும்)

அடே! துரோகத்துக்கஞ்சாத துன்மார்க்கா! பழுதறியா என் மைந்தன் பரிணயபுரத்துக்குப் பரிவுடன் சென்றதாகப் பசப்பினையே! பாரடா இந்தப் பதில் நிருபத்தை (எறிகிறார்.)

விஜ :—(கடிதத்தை வாசித்து விட்டு) அரசே! ஏதோ இதில் சூது.....

வெற்றி :—அந்தச் சூதைத்தானடா கேட்கிறேன்.

விஜ :—நான் "நிரபராதி".

வெற்றி :—(எரிப்புடன்) இன்னுமா பாசாங்கு?

நாக :—பகல் நாடகமாடுகிறான் பதிதன்.

வெற்றி :—மயிலே மயிலே இறகுபோடு என்றால் போடுமா?

ஆல :—மடக்கிப்பிடித்து இழுத்தால்தான் வரும்.

நாக :—அடிமேல் அடிகொடுத்தால் அம்மியும் தானே நகரும்.

வெற்றி :—அடேய்! உள்ளதைச் சொல்கிறாயா? உடம்பைப் புண்படுத்திக் கொள்கிறாயா?

விஜ :—உள்ளத்தில் உள்ளதைத்தான் உதடு உதிர்க்கிறது.

வெற்றி :—உதிர்க்கும் உதிர்க்கும்! (நாகநாதன் அரசன் காதில் சொல்லவும்) (திரும்பி) கொண்டுவா ஒருசவுக்கு.

சேவகன் :—(வணங்கிச் சென்று திரும்பிவந்து சவுக்குக் கொடுத்தொதுங்க)

வேற் :—(சவுக்கைக் கையில் பிடித்துநின்று) அடே! எங்கே என் மகன்?

விஜ :—தங்கள் கிருப உத்தரவுபோல.

வேற் :—சொன்னதையே திரும்ப திரும்பச் சொல்லிச் சாதிக்கும் கன்னெஞ்சக் காதகா! (என்று ஐந்தாறு அடிகள் அடித்து) எங்கே என்மகன்?

விஜ :—தங்கள் கிருப உத்தரவுபோல.

வேற் :—அங்கும் தானில்லையேடா! அதமா!

விஜ :—அங்கு இல்லையானால் எங்கோ எனக்குத் தெரியாது.

வேற் :—(வியப்போடு சினந்து) தெரியாதா? (அடித்து) சித்திரவதைப்பட்டுச் செத்துமடியப் போகிறாய்.

விஜ :—உயிரே போவதானாலும் உண்மை இதுதான்.

வேற்றி :—சொல்! எங்கே என்மகன்?

விஜ :—தெரியாது.

வேற் :—'தெரியாது' என்ன துணிச்சல்? (நன்றாய் அடித்து) அடே உன்னைக் கொன்று நொறுக்கி நாய்நரிகளுக்கு இரையாக்கி விடுவேன் தெரியுமா!

விஜ :—அப்போதாவது இந்தப் பேயுலகத்திலிருந்து விடுதலை கிடைக்கும்.

ஆல :—என்ன நெஞ்சழுத்தம்?

நாக :—இல்லாமலா வஞ்சனை செய்வான்?

வேற் :—சாதிக்கும் பாதகச் சண்டாளா! எங்கே என் மகன்?

விஜ :—தெரியாது.

வேற் :—தெரியாதா? (அடித்தல்)

விஜ :—தெரியாது.

வேற் :—தெரியாதா? (என்று அடித்துவிட்டுத் திரும்பி) அன்பர்களே! அடித்தடித்து என்கை அலுத்ததைத்தவிர அவன் வாயிலிருந்து உண்மை வெளிவரவில்லையே.

ஆல :—ஆம்பரபு ! அடிகளினுல் அவன் சரீரத்திலிருந்து இரத்தந்தான் வெளிவருகிறதே யொழிய அவன் வாயிலிருந்து உண்மை ஒரு துளியும் வெளிவர வில்லையே.

நாக :—வெளிவர வழியிருக்கிறது.

(வெற்றிவீரன் காதில் ஏதோ சொல்லவும்)

வெற் :—(உடனே திரும்பி) அடே ! சென்று தர்மாட்சியை அழைத்துவா சீக்கிரம் ! (ஏவலன் போகிருன்)

விஜ :—அரசே ! இந்த வேளையில் என் தாயை அழைத்து வரவேண்டாமென வேண்டிக்கொள்ளுகிறேன்.

வெற் :—அப்படியானுல் உண்மையைச் சொல்லிவிடு ! எங்கே என்மகன் ?

விஜ :—தெரியாது.

வெற் :—பிடிவாதங்கொண்ட படுபாதக மிண்டா ! மீண்டும் அதே பாடந்தானு ? (அடித்துவிட்டு) கொண்டுவா தர் மாட்சியை.

தர்மாட்சி :—(வந்துவணங்கி) அண்ணு ! வணக்கம் !

வெற் :—அண்ணு....'! (சினந்து) முறைக்கெல்லாம் குறை வில்லை. எங்கே என்மகன் ?

தர்மா :—எனக்குத் தெரியாதே ! அண்ணு !

வெற் :—ச்சை ! கெடுகாலப் படுநீலி ! உண்மையை உரைக்கிருயா அல்லது உன்மகன் கதி அடைகிருயா?

தர்மா :—(பதறி) என்மகன் கதியா ? (திரும்பி, மறுபக்கமாக, இரத்தம் வடிந்த உடைகளுடன் நின்று கொண்டிருக்கும் விஜயேந்திரனைக் கண்டு) ஆ ! என் செல்வமகனே ! (என்று பதறி ஓடிக்கட்டிப்பிடித்துக் கதறி அழவும்)

வெற் :—ஏய் தர்மாட்சி ! இப்படிவா எனது கட்டளை. (சோர்ந்து, தர்மாட்சி முன்னுல் வரவும்) எங்கே என் மகன் ?

தர்மா :—எனக்குத் தெரியவே தெரியாதே.

வெற் :—சிச்சீ! ஒத்தூக்கூடிய சத்துருப்பேதாய்! தெரியாதா? (பல்லைக் கடித்து படீர் படீர் என்று பல அடிகள் கொடுத்து விட்டு) எங்கே என்மகன்?

தர்மா :—(அடியால் துடிதுடித்து) தெரிந்தால்தானே அண்ணு சொல்லுவேன். தெரிந்திருந்தால் முதலிலேயே சொல்லியிருக்க மாட்டேனு? இன்னும் எதற்கண்ணு மறைக்கிறேன்?

வெற் :—உண்மையை உரைக்காத வரைக்கும் உன்னை உயிரோடு விடப்போவதில்லை. சொல்! எங்கே என் மகன்?

தர்மா :—தெரியாது.

வெற் :—இன்னும் தெரியாது தானு?

(என்று உக்ரத்தோடு பல அடிகள் அடித்தல்)

தர்மா :—ஐயோ! ஆ! ஐயோ! ஐயோ! (துடியாய்த்துடித்தல்)

விஜ :—(விலங்கைக்குலுக்கித் திருகித்திமிரி) நிறுத்தும்! கொற்றவனே! குற்றம் புரிந்தது நான். கொடுக்கும் தண்டனை என் தாயாருக்கா? இது என்ன நீதி? வேந்தே! நினைத்துப்பார்! கள்ளங்கபடற்று காட்டிலே நிம்மதியாய் வாழ்ந்திருந்தோமே; அழைத்து வந்து எங்களை அவதிக்குள்ளாக்கி நிலையைக் குலைத்து விட்டாயே!

நீ என்ன நெஞ்சம் இழந்தவனு? நீதியே தெரியாதவனு? நினைவூட்டுகிறேன் மன்னு! நீ கட்டளையிட்டதனுல்தான் வீரகுமாரனை என்னுடன் அழைத்துப்போனேன்.

வஞ்சனை மட்டும் என் நெஞ்சிலே விளையாடியிருந்தால் அவனைச் சாவுக்கு விருந்தாக்கியிருக்க முடியும் என்னுல்.

“வாய்மை” என் வாழ்வின் விளக்கம். அரசனே! எந்த ஆணையை மீறக்கூடாதென்று ஆத்திரத்தை அடக்கிவைத்துக் கொண்டிருக்கிறேனே அந்த ஆணையையும் மீறும்படி ஆக்ரோஷ மூட்டுகிறுய்

அந்தகனே! உன் அடக்குமுறைப் பாணம் என் ஆவேசத்தைத் தட்டி யெழுப்புகிறது, பாய்ந்துவிடும் உன்மேல் என் பொறுமையை நான் இழந்தால். மன்னனே! எனக்கேன் வஞ்சனை? பட்டம் வேண்டு மென்று நான் விரும்பியிருந்தால், என் வாளைப் பயன் படுத்தியிருப்பேனே யொழிய வஞ்சனையையல்ல.

எடுப்பார்கைப் பிள்ளையாகி இன்னதுதான் செய்கிறோம் என்றே புரியாமல் ஏதேதோ பேசி என்வாளுக்கு வேலை தராதே! பட்டம் பதவிபெற பேராசைப் பட்டதில்லை நான்.

எனக்குத் தெரியும்! அறிவைப் பறித்துவிடும் அரண்மனை வாசம் என்று. எனக்குத் தெரியும்! கற் கோட்டை வாழ்க்கை இதயத்தையும் கல்லாக்கி விடும் என்று.

குதித்துக் கொட்ட மடிக்கிறாயே, கட்டப்பட் டிருக்கிறேன், என்று தானே? என்னைக் கட்டியிருப் பது இருப்புச் சங்கிலிஅல்ல. சத்தியச்சங்கிலி தடைப்படுத்தி யிருக்கிறது.

கூடக் குரைக்கும் கோநாய்களே! ஆடாதீர் ஆணவத்தால். சாடாதீர் என்மேல் பேயுருக் கொண்டு. ''நன்றியறிதல்'' என் நாவை அடக்கு கிறது—நன்றி என்ற ஒன்றில்லாப் பன்றிகளே! தாயைத் தவிக்க தவிக்க அடிக்கும் வரைக்கும் பொறுமை பூண்டேன்; ஏன் தெரியுமா? என் தாயின் ஆணை. என் தாயின் ஆணைமட்டும் என்னைத் தடை செய்திரா விட்டால் தரைமட்டமாக்கியிருப் பேன் உங்களை.

என் தாயை அடிப்பதை நிறுத்தி என்னை அடி யுங்கள்! அழியுங்கள்! தாயைத் தொடாதீர்! தொட்ட கரம் துண்டிக்கப்படும் இது இறுதி எச்சரிக்கை!

ஆல :—எச்சரிக்கை! என்னடா எச்சரிக்கை?

நாக :—எச்சரிக்கை அல்ல. கட்டுப்பட்ட நாய்க்குட்டி கதறும் ஊளை.

வெற் :—(மிகச்சினந்து) என்னடா! (ஓரடி அடிக்கவும்)

தர்மா :—(உடனே ஓடிமுன்வந்து) அண்ணு! அண்ணு! மன்னிக்க வேண்டும்! என்னையேனும் அடியுங்கள்! என் மகனை அடிக்காதீர்கள் அண்ணு! (திரும்பி) மகனே! போறு! பொறு! மீருதே என் ஆணை மீருதே!

வெற் ;—ஒஹோ! மகன்! மகன்! (உறுத்துப் பார்த்து) "பிச்சைக்காரி" போன்ற அநாதியான உனக்கு மட்டும் உன்மகன்மேல் அவ்வளவு உருக்கம். ஆனால் இந்த அவனியையே ஆளவந்த எனது செல்வத் திருக்குமரனை இழந்த எனக்கு எவ்வாறிருக்கும் என்பதை எண்ணிப்பார்க்கவும் உனக்கு அவகாசமில்லையோ!

பெண் உருக்கொண்ட பேயே! இனியும் இந்தப் பாஷாண்டித தனமெல்லாம் என்னிடம் பலியாது. நான் அடிப்பது உனக்குச்சகிக்கவில்லை யானல் இதோ! (சவுக்குச்சாட்டையை கீழே யெறிந்து) நீயே அடித்து, சிட்சித்து உண்மையைச் சொல்லச் சொல் உன் மகனை.

கின்று தாமதித்து மறுவார்த்தை பேசுவாயானல் எனது ஆக்ஞையை மீறியதாகக் கருதப்படுவாய். இது எனது கட்டளை.

தர்மா :—(திடீர் அச்சவியப்போடு சோர்ந்து) ஆ! சட்டளை! கடுமையான கட்டளை.

வெற் :—தாமதிப்பதும் கூடாதென்பது கட்டளை. எடு சவுக்கை!

தர்மா :—(தியங்கி மயங்கி சவுக்கைக் கையிலெடுக்கிருள்) ஆ!

வெற் ;—உம்ம்! அடி! அடி! உண்மையைச் சொல்லும் வரை அடி! (மயங்கிநிற்கக் கண்டு) ஏன் தாமதிக்கிருய்?

தர்மா :—ஏ ஈசனே! இப்படி நடப்பிக்கவும் உன்மனம் இசைந்ததா? (என்று சவுக்கை ஓங்கி விஜயேந்திரன் மேல்

வைத்து) ஐயோ! என்கை முறிந்துவிடும் போல் இருக்கிறதே!

வேற் :—(சீறி) என்னடீ விளையாடுகிறாய்! உம்ம்! அடி! மீண்டும் தாமதிக்காமல் அடிக்க எனது கட்டளை.

தர்மா :—(பழையபடியே சவுக்கை மகன்மீது ஓங்கி, வைத்து) ஆ! தெய்வமே! (என்று கீழே விழுந்து மூர்ச்சையாகிறாள்.)

வேற் :—(விரைந்து சவுக்கைப் பிடுங்கி) என்னடீ! தளுக்குக் காட்டுகிறாய்? (என்று அடித்து) எழுந்திரு உம்ம்! (அடித்தடிய) எழுந்திரு! (அடித்தல்)

தர்மா :—(வருந்தியெழுந்ததும் விஜயேந்திரன் நிமிர்ந்து துடிப்பதைப் பார்த்து) கண்மணி விஜயேந்த்ரா! மனந்தடுமாறேல்! ஊக்கமது கைவிடேல்! குருநாதர் ஆணை. என் ஆணை.

வேற் .—(நோக்கிச் சினந்து) என்னடா நிமிருகிறாய்? மிருதுகுணமென்பதேயின்றி விரிந்த காட்டில் திரிந்தலைந்த மிருகக்குண மிலேச்சப்பயலே! என் மகனெங்கே? (அடி) பசுத்தோலைப் போர்த்து பாயும் புலிபோல் வந்த பஞ்சைப்பதரே! என்மகனெங்கே? [அடி)

விஜ :—(துடித்துத் துடித்து முகஞ்சுழித்து) தெரியாது.

வேற் :—அடித்துச் சினந்து) இன்னும் "தெரியாது" என்ற தாரக மந்திரத்தைத்தானா ஜெபிக்கிறாய்? (திரும்பி) என்ன சாதனை? என்ன கடின சித்தம்? என்ன குரூரம்?

நாக :—எங்கோ கிடந்த அற்பங்கள் தானே ப்ரபு! அப்பன் யார் என்று தெரியாத அநாதைப் பிண்டத்துக்கு அரச போகமும், அரண்மனை வாழ்வும் கிடைத்தால்....

ஆல :—என் அறிவு முறைதவறிப்போகாது?

வேற் :—நாட்டிலிருந்து துரத்தப்பட்டு, காட்டிலலைந்து, கரடிபோ லுழன்று திரிந்த கசடத் தூர்த்தையின் வயிற்றிற்பிறந்த

விஜ :—(திடீரென விலங்குகளைக்குலுக்கிமுறுக்கி நிமிர்ந்து) நிறுத்தும் பேச்சை! இருப்புவிலங்குகளுக்கும்

உருக்கு வாள்களுக்கும் பயப்பட்டு அடங்கி நிற்பதாகக்கருதி கொச்சைவார்த்தைகளைக் கொட்டவேண்டாமென்று மீண்டும் வற்புறுத்தி எச்சரிக்கிறேன்.

வீசும் காற்றும் விரைந்து என்தாயின் மெல்லருந் தேகத்தின் மீது மோதப்பொறுக்காத நான்; நீர் என் அன்னையை இம்சித்ததற்கெல்லாம் அந்த ஒப்பற்ற சாந்தி மகாத்மாவின் உபதேச வறுதிக்கும் உத்தம சத்திய மாதாவின் கட்டளைக்குமே கட்டுப்பட்டு கண்டும் காணுது நின்றேன்.

உம்மாற் போஷிக்கப் பெற்ற எம் இரு சரீரங்களையும் சதகூருகத் தறிக்கினும் சகிப்பேன். சகித்தேன் இன்னும் சகிப்பேன். செய்வது அக்கிரமம் என்று தெள்ளத்தெளிய தெரிந்த பின்னும் சகிப்பேன்.

"தனை வளர்த்தவன் ஒருபிதா" என்னும் நீதியை நினைத்தே, களங்கமற்ற எனது தாயை இகழ்ந்துரைத்த உமது நாவைக் கண்டித்துத் துண்டிக்காது விடுத்தேன் இதுவரையும். என்னை மட்டும் தனியாக எவ்வளவு ஏசினுலும் பொறுப்பேன். என் தாயைச் சம்பந்தப்படுத்தியோ தாயைத் தனிபாகவோ ஏதாவதொரு சின்னஞ்சிறு மொழியேனும் இகழ்ந்து பேசக் கேட்பேனேயானுல் பூட்டிய விலங்குகளும் நீட்டிய ஆயுதங்களும் தடுத்துவிடாது என்னை.

தர்மா :—அப்பனே! பதருதே! கண்ணே! பொறு!

(என்றுமகனைத் தழுவி தடவிநிற்க தயங்கி குனிந்து இருவரும் மௌனம்.)

வெற் .—(திரும்பி) ஆருயிர்த் தோழர்களாகிய ஆலகால நாகநாத ஆப்தர்களே! விஷயத்தைப் பார்க்கும் போது விலங்கு முறிந்தால் விபரீதம் விளையும் போலல்லவா விளங்குகிறது.

நாக :—அதற்கும் ஒரு முன்னேற்பாடு.

(அரசனை நெருங்கி காதில் இரகசியம் சொல்லவும்)

வேற் :—சரி! (திரும்பி நிமிர்ந்து) டேய்! போய் இரண்டு இரும்புச் சங்கிலிகள் கொண்டுவா!

(சேவகன் போய், கொண்டு வரவும்)

ஏ தர்மாட்சி! இதோ இந்தச் சங்கிலிகளால் உன் மகன் மார்பிலும் இடுப்பிலும் பூட்டிக் கொடுக்க எனது கட்டளை.

தர்மா :—கட்டளைப்படியே செய்கிறேன் அண்ணு!

(பூட்டி விடவும் இருவீரர் பிடித்துக் கொள்கின்றனர்)

வேற் :—(நிமிர்ந்து நோக்கி) அடே! பெரிய நீதிமான் போலவும் ஜாதிமான் போலவும் பேசுகிறுயே! கேவலம் உனக்கு உன் தாய்மீதும் உன் தாய்க்கு உன்மீதும் இருப்பதாக இங்கு நடிக்கும் அன்பு அபிமானம் ஆசை உரிமை உருக்கம் போன்று என்மீது என் மகனுக்கும் என்மகன்மீது எனக்கும் இருக்காது என்ற துணிபோ உனக்கு.

தாயைத் தூஷித்தேனென்று தாவிக்குதிக்கிறுயே! உயிருடன் என் செல்வனை இழந்த நான் இன்னும் உன்னை நிந்தித்து இகழாது வந்தித்து மகிழ்வேன் என்று சிந்தித்துச் செறுக்கடைகிறுயா? செய்நன்றி கொன்ற தீயா! எங்கே என்மகன்?

விஜ :—தெரியாது.

வேற் :—தெரியாது (சினந்து அடித்து) "தெரியாது" என்ற நெட்டுருப் பாடத்தைத்தான் திருப்புமுறை வைக்கிறுயா இன்னும். (அடித்தல்)

இவ்வளவுக்குப் பிறகும் எள்ளளவும் மசியாது பிடிவாதம் பிடிப்பது உனது பிறவிக்குணம் போலும்! சாதிக்கும் பாதகச் சண்டாளா!

இனத்தினின்றும் பிரிந்து வனத்திலே திரிந்து இன்னருக் கென்றில்லாது எல்லாருக்கும் பெண்டாகிய துன்மார்க்கத் தோஷிக்குப் பிறந்த—

விஜ :—ஆ ! ஆ !

(துடித்துத் தாவிக்குலுக்கித் திருகிய ஓரே முறுக்கில் தன் அவயவங்களில் பூட்டப்பட்டிருந்த சங்கிலிகள் விடுபடுகின்றன. இருபுறமும் நின்றிருந்த வீரர்கள் பிடித்திருந்த வாளாயுதங்களைப் பிடுங்கி இருகரங்களாலும் சுழற்றிக் கொண்டு அரசனை நெருங்கி)

மாண்டுமடியக் காலங்கிட்டி மீண்டும் என் தாயைத் தூஷித்த வெற்றிவீர ராஜனே! தைரியமிருந்தால் தற்காத்துக் கொள் உன் தலையை.

உன் குருதியைக் குடிக்கக் கூசாது என் கூர் வாள். என் தாயைப்பழித்த உன் வாயைக்கிழிக்காமல் விடமாட்டேன். எடுவாளை ! இறங்கு கீழே! நீதியற்ற நிட்டூரனே ! உன்னைக் கொன்று—.

தர்மா :—(ஓடிக்குறுக்கிட்டுத் தடுத்து) மகனே பொறு !

வெற் :—பதறி தடுமாறி) தர்மாட்சி ! உங்களைக் காத்ததின் பலனா இது? என் மகனையும மறைத்து, என்னையும் மடிக்கப் பார்க்கிறான் உன்மகன்.

தர்மா :—தங்களுக்கு ஒரு ஆபத்தும் வராது அண்ணா !

விஜ :—(ஆக்ரோஷத்தோடு) அம்மா ! விடுங்கள் கையை. நிராயுதபாணியாய் நின்றதால் விழவில்லை அவன் தலை நிலத்திலே இதற்குள்.

தர்மா :—வேண்டாம் கோபம் ! கண்ணே ! அமைதிபெறு ! ஆறுதல் சினம். ஐயன் குருதேவரின் அருள் மொழியை மறவாதே ! சாந்தி மகாத்மாவின் சத்தியத்தை மீறாதே ! அதோ ஆன்மஜோதியாய் விளங்கும் அண்ணலைப் பார் ! அன்னாரின் திருவாக்கினின்றும் மலர்ந்த அறிவுரையை எண்ணிப்பார் !

விடு வாள்களை ! (மகனிடமிருந்து வாள்களை வாங்கவும்) (நாகநாதன் அரசன் காதில் இரகசியம் சொல்லவும்)

வெற் :—(ஏவலனைப் பார்த்து) ஏய் ! போய் புதுவிலங்குகள் கொண்டு வந்து தர்மாட்சியிடம் கொடு !

(ஏவலன் கொண்டு வந்து கொடுக்கவும்)

வாங்கி விலங்குகளைப் பூட்டிவிடு! முன்போல் பிடிக்கச் சொல்! தாமதிக்காமல் நிறைவேற்றும்படி எனது கட்டளை.

தர்மா :—(வாங்கி சொன்னவிதம் செய்து) அண்ணு! முன்போலவே என்மகனுக்கு விலங்குகளையும சங்கிலிகளையும் பூட்டி, கட்டளையை நிறைவேற்றி விட்டேன். மன்னிக்க வேண்டும் மைந்தனே.

விஜ :—அம்மா! இனிநான் வாழவே முடியாது. (வருத்தம்)

நாக :—அதுசரி! உன்னை வாழவிட்டால் தானே.

ஆல :—அதனுல் தான் முடியாது என்கிருன் அவனே முந்தி.

விஜ :—ஆலகால னென்னும் நாசகாலனே! அடக்கு வாயை. (திரும்பி) அம்மா!

தர்மா :—வருந்தாதே! சத்தியம் ஜெயிக்கும்.

வெற் ;—ஜெயிக்கும் அடுத்த ஜென்மமிருந்தால். (கிமிர்ந்து) யாரங்கே? (எவலா வந்து வணங்கவும்) இந்தச் சண்டாளனைத் தூக்கிலிடுங்கள் எல்லேக் கப்பால். இந்தப் பாதகியை நாட்டைவிட்டு வெளியேற்றி, காட்டில் கொண்டுபோய் விடுங்கள்! வந்ததுபோல் போகட்டும் வனத்துக்கு. (திரும்பி) அன்பர்களே! ஆவன நடக்கட்டும்! நான் வருகிறேன் ஆ! வீரகுமாரா! வீரகுமாரா! (தள்ளாடிய படியேபோதல்)

நாக :—வீரவாள் பரிசுபெற்ற விஜயேந்திரரே! எப்படி எங்கள் வேலை?

விஜ :—வெந்த புண்ணில் சொருகாதீர் வேலை.

ஆல :—குடிக்க முடியாததால் கொட்டிக் கவிழ்த்தோம் பாலை.

விஜ :—கொடியமோசக் குள்ளநரிகளே கூடி ஆட்டாதீர் வாலை.

நாக :—வெற்றிகண்ட இடத்திலேயே வேதனை, அது மட்டுமா? வெளியேற்றம்.

ஆல :—"நகர்நீங்கு காண்டம்" என்று நவிலுமையா நற்றமிழ் வழக்கிலே.

நாக :—அன்று என்னை அவமானப் படுத்தினுய் கத்திச் சண்டையில் ஜெயித்து. இன்று அதே அரச சபை யிலே உன்னை அவமானமும் அலங்கோலமும் அவதி யும படுத்தி உன் ஆவிக்கே உலைவைத்து விட்டேன்.

ஆல :—சாவுதான் உனக்கு இனி தஞ்சம்.

நாக :—சரியாய்த் தீர்ந்தது எனது வஞ்சம்.

ஆல :—குளிர்ந்தது அடியேன் நெஞ்சம்.

விஜ :—கோழைகட்கும் வார்த்தைக்கில்லை பஞ்சம்.

ஆல :—(சேவகனைப் பார்த்து) கூட்டிவா கொலைஞர்களை (சேவகன் போய் கொலைஞர்களோடு வந்து வணங்கி நிற்கவும்) காலதாமதம் செய்யாது கட்டளையை நிறைவேற்றுங் கள்!

சேவகரும் கொலைஞரும் :—உத்தரவு

ஆல :—நாகநாதரே! செல்வோமா நமதில்லங்களுக்கு.

நாக :—ஆனந்தமாக!

ஆல :—நான் வருகிறேன். (போகிறுன்)

நாக :—உண்மையில்லாத உலகம். (செல்கிறுன்)

கொலைஞர் :—(விஜயேந்திரனையும் தர்மாட்சியையும் நெருங்கி) உமம்! புறப்படுங்கள்!

விஜயே :—அம்மா! (தவிப்பு)

தர்மா :—கண்ணே! விஜயேந்த்ரா!

கொலை :—போங்கள்! போங்கள்! (தள்ளிப் போதல்)

---

## காட்சி 23

இடம் : மலைச்சுரங்கக் குகை. காலம் : இரவு

இருப்போர் : வீரகுமாரன், காவலர்.

(காவலர் குடிவெறியால் மயங்கிக் கிடக்க, குடிமயக்கத்தில் தள்ளாடியபடியே உணவு கொண்டு வந்தவனை இழுத்துப் போட்டு அவன் ஆடை முகமூடிகளை அணிந்து கொண்டு வீரகுமாரன் வெளியேறல்.)

## காட்சி 24

இடம் : சந்திரபுரிக் காடு. காலம் : பகல்.

தர்மாட்சி:—(அயர்ந்து துக்கித்துச் சோர்ந்து தள்ளாடித் தள்ளாடி தலைவிரி கோலமாய்)

கடவுளே! இன்னும் சோதனையா? அரச போகத்தில் பிறந்து ஆண்டிச்சியானேன். காட்டிலே பெற்றேன் பிள்ளையை. நான் பெற்ற பிள்ளைக்கு நானே விலங்கு பூட்டினேன்.

உன் மனமென்ன கல்லா? எளியார் பால் கொஞ்சமும் இளகாதா? உலகம் புகழும் ஒரே மகனைத் தந்து ஒரு கணத்திலே கனவுபோல மறைத்து விட்டாயே! என் கண்ணீர் உன் தாகத் துக்குத் தண்ணீரா? வானளாவப் புகழ்கிறார்களே வையமெல்லாம் உன் படைப்பென்று. என் வேதனை உனக்கு விளையாட்டா? போதும் உன் விளையாட்டு. இரக்கமற்ற இறைவனே! எனக்கு மட்டும் இவ் கென்ன வேலை? (மபங்கி) என் பதியைப் பறிகொடுத் தேன், பாலனையும் இழந்தேன். பெண்ணாய்ப் பிறந்தாரில் யார் பட்டார் நான் பட்ட பெருந்துயரம்?

கருணையில்லாக் கடவுளே! இதோ நானும் வருகிறேன் ஏற்றுக்கொள!.

(தலையைப பாறையில் மோதி தற்கொலை செய்து கொள்ள முயற்சி செய்ய, அவ்வழியாக வந்து கொண்டிருந்த காவலர் கள் பார்த்து வேகமாகக் குறுக்கிட்டுத் தடுத்து)

காவலர் :—அம்மா என்ன வேலை செய்யத்துணிஞ்சிங்க! என்னதாஞ் சங்கட்டங்க வந்தாலும இப்படி தற் கொலை செஞ்சிசகிடலாமா?

காவ-2 :—அம்மா! நீங்க யாருங்க? எந்த ஊருங்க?

தர்மா :—ஐயா! என்னை ஏன் தடுத்துக் காப்பாற்றினீர் கள்? காண்போரெல்லாம் கேலி பேசும் கீழான கேவல வாழ்வு ஏன் நான் வாழவேண்டும்?

காவ :—பாவம்! ரொம்ப மனசு ஒடைஞ்சு போயிருக் காங்க.

காவ-1 ;—அம்மா ! வருத்தப்படாதிங்க. ஒங்க கஷ்டத் துக்கும் ஒரு முடிவு இல்லாமலா போகும் ? வாழ்வு ஒரு காலம் தாழ்வு ஒரு காலம். (ஒதுங்கி) இந்த அம் மாளேப் பாத்தா பாவம் பரிதாபமாயிருக்கு. இவுங் களே அழைச்சுப்போயி நம்ம ராசாக்கிட்ட விடலாம் நடந்ததே யெல்லாம் சொல்லியின்னு நெனைக்கிறேங் ஒங் ஓசனே யென்ன ?

காவ :—ஆமடா அதுதாஞ்சரி ! ரொம்ப நாளுக்கு முன்னே இதே காட்டுலேதாங் திரிஞ்சு கஷ்டப்பட்ட ஒரு கெழவனுரை ராசா கூட்டிவந்தாரு, பொறகு மங் திரியாக் கூட ஆக்கிக்கிட்டாரு.

காவ-' :—அம்மா ! இது சந்திரபுரிக் காடு. எங்களுக்கு ஜெயச்சந்த்ர ராசாவூட்லதாங் வேலே. எங்க புதுமந்திரி ஐயாவும் ரொம்ப நல்லவுரு, அரசரும் எரக்கச் சித்த முள்ளவுரு அண்டுனவங்களே ஆதரிக்கிற அண்ண னுன்னு பேரு, வருத்தத்தே யெல்லாம் வுட்டுட்டு வாங்க போவலாம்.

தர்மா ;—வேண்டாம் ஐயா ! எந்த நல்ல அரசர் உதவியும் வேண்டாம.

காவ ;—அப்படிச் சொல்லப்படாது பொறப்படுங்க ! வாங்கம்மா ! (மரியாதையாகக் கூட்டிப் போகிருர்கள்)

———

## காட்சி 25

இடம் : *சந்திரபுரி அரசவை.* காலம் : பகல்

(ஜெயச்சந்திர மன்னன், மந்திரி உத்தமபூபதி, பேசிக் கொண்டிருக்கிருர்கள்)

உத்தமபூபதி :—இந்த வகையில் பெண்ணின் விருப்பத்தை யறிந்து நடப்பதுதான் நல்லது.

ஜெய :—அது தான் மணக்க மாட்டாளாம் நான் குறித்த மாப்பிள்ளேயை (சினமாக) கள்ளக் காதல்வேறே நடக் கிறதாம். ஏய் யாரங்கே ! (அரண்மனேச் சேவகர் வந்து

வணங்க) (உக்கிர தொனியில்) கன்னிகா மாடத்தின் கோட்டையையும் நந்தவனத்தையும் சுற்றி காவல் கடுமையாக இருக்கட்டும் என்று நான் கடின கட்டளை யிட்டிருப்பதாக, காவலர் தலைவனிடம் கூறிவா!

சேவ :—உத்தரவு (வணங்கிப் போகவும்)

உத்தம .—தாங்கள் குறித்த மணமகன் ......?

ஜெய :—உத்தம நாட்டு மன்னர் பீமாங்கத பூமான்.

உத்தம :—(வியப்பாக) உத்தம நாட்டு மன்னனா! பீமாங்கதனா!

ஜெய :—ஆம்! (பார்த்து) உங்களுக்கும் அவரைத் தெரியுமா?

உத்தம :—தெரியும். அவன் வயோதிகன்....

ஜெய :—ஆனால் என்ன? உத்தம நாடு என்னைச் சேரும் போது! அதோடு அவன் பெண்ணை நான்....

(காவலர் தர்மாட்சியை அழைத்து வரல், வந்து வணங்கி)

காவலர் :—அரசே! இந்த அம்மாவங்க, நம்ப ஊருக்கு வடக்கே இருக்கிற காட்டுலே தற்கொலை செஞ்சிக்க இருந்தாங்க. நல்லவேளையா அந்தச் சமயத்திலே தடுத்து நிறுத்தி அழைச்சி வந்தோமுங்க! கொஞ்ச நேரந் தவறியிருந்தா செத்தே போயிருப்பாங்க. பாத்தா ரொமப நல்லவங்களாகத் தெரியுதுங்க!

ஜெய :—அம்மையே! தாங்கள் யார்? ஏன் தற்கொலை செய்து கொள்ளத் துணிந்தீர்கள்? இந்தப் பரந்த உலகத்திலே நீங்கள் ஒருயிர் வாழ இடமில்லையா? வாழ்வில் வளைவு ஏற்படுவதும் வழுக்கி விழுவதும் தாழ்வே சம்பவிப்பதும் சகஜம். அப்படி என்ன தாங்க முடியாத இன்னல் நேர்ந்தது தங்களுக்கு.

தர்மா :—துர்ப்பாக்கியவதியான எனது துன்ப வரலாற்றை ஏன் கேட்கிறீர்கள்? அது கேட்பவர்கள் மனதையும் கெதிகலங்க வைக்கும் துயரம் நிறைந்த துன்ப சம்பவத் தொடர்கதை. அவைகளைக் கூறி

தங்களது அரிய நேரத்தையும் அகமகிழ்ச்சியையும் வீணாக்க விரும்பவில்லை மன்னிக்க வேண்டும். அரசே! நான் ஒரு அநாதை என்பதை மட்டும் அறிவித்துக் கொள்ளுகிறேன்.

ஜெய :—அப்படியில்லை. உள்ளதை மற்றவர்களிடம் வெளியிடுவதால் ஒருவாறு உள்ளத்துக்கும் ஆறுதல் ஏற்படும் என்பது இயற்கை. அம்மா! சொல்லுங்கள் சும்மா.

தர்மா :—கருத்தரித்த போது கணவனைப் பிரிந்து, காட்டிலே பிள்ளை பெற்று, காளைப்பருவம் அடைந்த ஒப்பற்ற ஒரு மகனையும் மரண மேடைக்கு அனுப்பிவிட்ட எனக்கு வாழ்வு ஒருகேடா?

ஜெய :—வருந்தாதீர் அம்மா! எந்த ஊர்? என்ன பேர்? மற்றும் வரலாறுகளை விபரமாகச் சொல்லுங்கள்!

தர்மா :—தாங்கள் பெரிதும் வற்புறுத்துவதால் சுருக்கமாகக் கூறுகிறேன் அரசே! நான் ஒரு பெரிய குடும்பத்திற் பிறந்து, பேரான குடும்பத்திற் புகுந்த பேதை. என் பதிக்குப் பைத்தியம் என்று கூறி என்னையும் அவரையும் பிரித்தனர். பிரித்த என்னை நிறை கர்ப்பத்தோடு காட்டுக்கு எடுத்துச் சென்று விடுத்தனர் தனியாக. அங்கேயே பிரசவித்தேன். அநாதையாய் யாருந் துணையின்றி, அந்தப் பிள்ளையும் அன்புடன் வளர்ந்து அவனிபுகழ வாழ்ந்து அரச தண்டனைக் காளானான் இறுதியில். அந்தோ! இந்த அபாக்கியவதியின் பெயர் தர்மாட்சி.

உத்தம :—(பதறி) ஆ! தர்மாட்சி! (உற்று நோக்குகிறார்)

தர்மா :—(திடுக்கிட்டு பார்த்து நிற்க)

உத்தம :—என்னைத் தெரியவில்லையா தர்மாட்சி! உன் பர்த்தா.

தர்மா :—சுவாமி! (வந்து காலில் மோதிவிழுந்து) தாங்கள் இருக்கிறீர்களா?

உத்த :—தர்மாட்சி! வருந்தாதே! என்னைப் பைத்தியம் என்று பறைசாற்றி அந்தரங்கச் சிறையிலடைத்து விட்டு அரியாசனம் ஏறிய என் தம்பி ஆண்டுகள் பல சென்றபின் அகற்றினான் என்னை நாட்டை விட்டுக் காட்டுக்கு. அங்கே கண்டு அழைத்து வந்து அன்று முதல் இன்றுவரை ஆதரித்து வருகிறார் இந்தப் பரோபகார அரசர் பிரான். நீ....

ஜெய :—அதெல்லாம் அவகாசமாக விசாரித்துக் கொள்ள லாம். அம்மையார் மிகவும இளைத்துக் களைத்துப் போயிருக்கிறார்கள், முதலில் போய் நீராடி அன்ன மருந்தி ஆசுவாசப் பட்டுக் களை தெளியட்டும் (திரும்பி) அழைத்துச் செல்லுவகள் அந்தப் புரத்துக்கு.

(அழைத்துப் போகிறார்கள்)

(மந்திரி உத்தமரைப் பார்த்து) வாருங்கள் போகலாம்.

(போகின்றனர்.)

---

## காட்சி 26

இடம் : காடு. தூக்குக் கயிறு தொங்கும் மரம். காலம்: காலை

(தொங்கும் கயிற்றுக்குக் கீழே மரங்களால் கட்டப்பட்ட மேடைமீது விஜயேந்திரன் கைவிலங்குகளுடன் நிற்க.)

கொலைஞர் :—(பார்த்து) குற்றவாளியே! ஏதாவது சொல்ல விருமபினால் சொல்லிக் கொள்!

விஜ :—ஆதரவற்று நடுக்காட்டிலே பிறந்து அடியாரின் ஆதரணையில் வளர்ந்து அரசன் தயவால் பெரும் பதவி பூண்டு அன்னையின் கைகளாலேயே விலங்கு பூட்டப்பட்டு கடைசியிலே தூக்கு மரத்தில் தொங்க இருக்கும் நான் எதைக்கூறட்டும்?

நீதியின் பேரால் நிரபராதி தண்டிக்கப்படு வதைச் சொல்லட்டுமா? மன்னவன்மகன் வீர குமாரன் மாயமாய் மறைந்ததைச் சொல்லட்டுமா?

பட்டம் பதவிகளுக்காக கெட்ட செயல்களை மட்டுமீறிச் செய்துள்ள துட்டர்களின் துரோகச் செயல்களைச் சொல்லட்டுமா?

நாட்டுக்காகப் போராடி, அரசனுக்காகவே வாழ்ந்த எனக்கு வந்த இந்தக் கதியைச் சொல்லட்டுமா? சோலைஞர்களே! நான் சொல்லுவதெல்லாம் இதுதான்:—நடப்புக்கும் நடிப்புக்கும் இடையேயுள்ள வித்தியாசத்தைத் தெரிந்துகொள்ள முடியாமல் அநியாயத்தை அக்குமீறிப் போகவிட்ட அரசனின் அறியாமைக்காக அநுதாபப்படுகிறேன்.

தேசத்தின் எதிர்காலம் சுபிட்சப் படவேண்டுமே என்ற எண்ணமும் கவலையும் திவலையுமில்லாது பட்டம் பதவிகளுக்கு மட்டுமே தங்களை ஈடுபாடு செய்து கொண்டுள்ளவர்களெல்லாம் இன்று அமைச்சர்களாகவும், அமர்க்களத் தளபதிகளாகவும் ஆலோசகப் பிரதிநிதிகளாகவும், அதிகாரத் தொகுதிகளை அடைத்துக் கொண்டு ஆட்சிப் பீடங்களை ஆக்ரமித்து நிற்கின்றனர், அத்தகைய அயோக்கிய அக்ரமப் பொய்வேடதாரிகளுக்கு "அபபோற் சிம்மாதன ஆக்கமேடை".

ஆதி பூர்வ முதற்கொண்டே அந்நிய ஆட்சிக்கு உட்பட்டு அடங்கிக் கிடந்து, அற்ப சிற்றரசாக இருந்த அநாமதேய அபல விஜயபுரியை, அகிலம் புகழும்ஆஸ்தான சாம்ராஜ்ய ஏகாதிபத்தியமாக மாற்றியமைத்து உலக சரித்திரத்திலேயே ஒரு புது அத்தியாயத்தைப் பொன் எழுத்துக்களால் பொறிக்கும் வண்ணம் "வெற்றி வீர பூபதி" என்னும் இயற் பெயரைச் செயற் பெயராக விளங்கும்படி "வீரப் போர்" புரிந்து திக்விஜயம் செய்து ஜெயக்கொடி நாட்டி, இந்நாட்டின் க்ஷேமத் துக்காக,

உழைப்பின் ஊதியத்தை உழைப்பவர்க்கே கிடைக்க உதவும் உயரிய கொள்கைக்காக,

பாட்டாளி மக்கள் பசிப்பிணியின்றி வாழும் பான்மைக்காக,

எனக்கும் எனது ஆருயிர் அன்னைக்கும் ஊனுடையளித்து உய்வித்த ஒரே ஒரு காரணத்துக்காக,

உடல் பொருள் ஆவி மூன்றையும் அர்ப்பணம் செய்து உஜ்ஜீவித்து வந்த உண்மைத்தியாக உத்தம ஊழியனுகிய எனசகு, உதுத்தாகளான தூர்த்தர்களைத் தண்டிக்கும் தூக்குமேடை.

என்னே ! மாறுதல் மிக்க மனித வாழ்க்கை ! அந்தோ ! வஞ்சகம் நிறைந்த சஞ்சல உலகிலிருந்து விடுதலைபெறும் நாளை அந்தத் திருநாளை இல்லை அந்தப் புனித வேளையை அதிவிரைவில் அணுப் பிரமாண விரைவில் ஆவலோடு எதிர்பார்க்கிறேன் ஆனநதமாக.

ஆனல் உண்மையறியாத உலகம், உண்ட வீட்டுக்கு இரண்டகம நினைததான் விஜயேந்திரன் என ஊனமாகத் தூற்றும் ஈனவசைக்காளாகி இறக்க நேர்ந்ததே யென்ற எண்ணம் ஒன்று மட்டுமேதான் என் நெஞ்சத்திற் சஞ்சரிக்கிறதேயன்றி, அழிவாகிய படுபாதகத துறையிலிறங்கி இன்னல் புரிந்த இரக்க மற்ற அரக்கமனப்படைத்த செறுக்கர்களைப் பழி வாங்காமல் இறககநேர்ந்ததற்காகவோ,

மகாராஜர் போற்றும் சுகராஜபோக இக வாழ்வைத் துறக்க நேர்ந்ததற்காகவோ,

இந்திராணியும் இணையாகா இளங்காதல் மனேகரி சந்திராங்கனையை மணந்து ஜகமீது வாழாது மரிக்க நேர்ந்ததற்காகவோ நான் வருந்தவில்லை.

எனது இதயாலயத்திலே எல்லையில்லா அன்புத் தெய்வமாக எழிற்கோவில் கொண்டுள்ள அன்னையைப் பிரிந்த அந்தக் கணமே பிரிந்திருக்க வேண்டிய

ஆன்மா இதுகாறும் பிரியாதிருப்பது காலதேவனின் கணித கட்டளை போலும்!

பூவுலகை வாழ்விக்க வந்த புனிதமகான்களின் ஆவிகளையே ஈவிரக்கமின்றி ஆடிக்கொள்ளை கொண்ட அதர்ம மகாமண்டலமே! இதோ எனது பிராணனை யும உனது கோரப்பலிபீடத்திலே குருதி சிந்தாமல் கோழைபோல் சமர்ப்பிக்கிறேன்.

இதுபோன்று இனிமேலும, நிரபராதிகளும், நியாயவாதிகளும நிட்டூரமாகக் கொலை செய்யப்படா மல் நீதியும் நேர்மையும் நீடூழிவாழ வழி செய்வா யாக! இன்றேல் சூதும வாதும் தீதும் சூழ்ச்சியும் நிறைந்து இந்தத் தொல்லுலகமே அழிந்து போகும் என்பது திண்ணம் திண்ணம்.

பொதுநல சேவை புரிந்துள்ள புண்ணிய புரு ஷர்களுக்கு, பொய்யை மெய்யென்று நம்பும் போலி யுலகம் தந்த பரிசுகள் என்ன?

போற்றுதல் இன்றித் தூற்றுதலும், போக்கிட மற்ற தூக்குத் தண்டனை போன்ற மரண முடிவும் தான் என்பது சரித்திரம் சாற்றும் உண்மை.

கொலைஞர்களே! என் பிதா யாரோ தெரியாது. என் தாய் நாடு கடததப்பட்டார். அதற்குக் கார ணம் நான்தான். என் அருமைத் தாயையும் இழந்த பின் நான் ஏன் வாழவேண்டும்? எவ்வளவு விரைவில் தூக்கிவிட முடியுமோ அவ்வளவு விரைவில் முடித்து விடுங்கள்! என் தாயை எண்ணியபடியே நிற்கிறேன். இதுதான் எனது இறுதி வேண்டுகோள்.

(கொலைஞர் விஜயேந்திரனின் கண்ணைக் கட்டப் போகவும்)

வேண்டாம்! என்வீரம் இன்னும் மறைந்துவிட வில்லை. சாகப்பயந்து தவிக்கும் சக்தியற்றவர் களுக்குக் கட்டுவது போல என்கண்களைக் கட்ட

வேண்டாம். கயமைத் தனம் நிறைந்த உலகத்தை என் கண்களாற் பார்த்துக் கொண்டே சாகிறேன்.

(கயிறு இறுக்கபபடும் தருணம் வேற்று உடையோடு மாற்று உருவுடன் ஓடிவந்து)

வீரகுமாரன் :—நிறுத்துங்கள்! நிறுத்துங்கள்!

விஜ :—(விலக்கியதைக் கண்டு வியப்புற்று) ஆ! வீரகுமார்!

வீர :—(கயிற்றை நீக்கி இறக்கி) நண்பா! இதென்ன கோலம்?

விஜ :—எல்லாம், நீர் பரிணயபுரம் போகாததால் ஏற்பட்ட அலங்கோலமதான் (கொலைஞரைப் பார்த்து) ஏய்! கொலைஞர்களே! உம்ம்! ஆகட்டும! (கொலைஞர் மௌனம்) ஏன் தாமதிக்கிறீர்கள்....! (பார்த்து) வீர குமார்! விலகும்! வாழத்தான் முடியவில்லையென்ருல் என்வினை என்னை மாளவும் விடவில்லை. (கொலைஞரைப் பார்த்து) ஏன் விழிக்கிறீர்கள்? (பதிலில்லை) வீரகுமார்! உமது கைகளால் என்னைக் கொன்று விடும்! அல்லது அந்த வாளையாவது கொடும்! தற்கொலையாவது செய்து கொள்கிறேன்.

வீர :—அன்ப! நான்தான் ஏன் உம்மைக் கொல்ல வேண்டும்? இல்லாவிட்டால் நீர்தான் ஏன் தற்கொலை செய்து கொள்ள வேண்டும்?

விஜ :—நான் யாருக்காக, எதற்காக வாழவேண்டும்?

வீர :—உமது அன்னைக்காக வாழவேண்டும், கொடுத்த வாக்குறுதியைக் காக்க வாழவேண்டும்.

விஜ :—என் அன்னையார் இன்னுமா இருக்கப் போகிருர்கள்? நாடு கடத்தப்பட்ட அன்றே நமனுக்கு விருந்தாகியிருப்பார்கள். மற்றும் எந்த வாக்குறுதியைக் காக்க?

வீர :—மரண தண்டனையடைந்து மடியஇருந்த நீரே சாகாமல் இருக்கும் போது, நாடு கடத்தப்பட்ட நல்லன்னை

யார் மட்டும் இறந்துபோயிருப்பார் என்பது என்ன உறுதி?

உமது கையிலுள்ள கணையாழியைப் பாரும்! சந்திராங்கனை உமக்காகக் கண்ணீர் வடித்துக் காத்துக் கொண்டிருப்பாள். வருகிறேன் ஒரு வாரத்தில் என்று வாக்குறுதி கொடுத்து வந்தீரே! பாவம்! சந்த்ரா நீர் வருவீர் வருவீர் என்று வழிமேல் விழி வைத்துப் பார்த்து ஏங்கி நிற்பாள். அதன்படி நீர் போகவில்லை யென்றால் அவள் உண்மையாகவே உயிர் விட்டு விடுவாள் என்பதும் உமக்குத் தெரியும்!

அடைந்ததெல்லாம் போதாதென்று அந்தப் பெண் பாவத்தையும் ஏற்றுக் கொள்கிறீரா? அதுவும் இன்றோடுதான் ஏழாவது நாள் முடிகிறது.

விஜ:—(சிந்தித்து) ஆம்! அன்னையின் கதியும் என்ன ஆனதோ? சந்த்ராவுக்கும் வாக்குறுதி கொடுத்து விட்டேன் (ஏங்கி) இறைவனே! என்வாழ்வில் எத்தனை சிக்கல்கள்!

வீரகுமார்! அத்தனையையும் இழந்த பின்னும் நான் காதலுக்காக மட்டும் வாழவேண்டுமா பித்தனைப் போல.

வீர:—காதலுக்கு மட்டுமல்ல கழறிய சத்தியத்தைக் காப்பாற்றவும். சரி! மிகவும் கிரங்கிக் களைத்து இருக்கிறீர்! முதலில் சற்று ஆறுதலாக ஓரிடத்தில் அமர்ந்து களைதெளிந்த, பிறகு மற்றைய விஷயங்களை சாவகாசமாகப் பேசிக் கொள்ளலாம். மனதைத் திடப்படுத்தி இதைவிட்டு வாருங்கள் அந்தக் குளிர் நிழலுக்குச் செல்வோம்.

———

## காட்சி 26

இடம்: சந்திரபுரி நந்தவனம். காலம்: இரவு.

சந்திராங்கனை :—(தனியே வருந்தி)

(சோகந்தோய்ந்த தொனியில் ஆழ்ந்த சிந்தனையோடு)

இன்றோடு ஏழு நாட்கள் ஆகின்றனவே! காதலர் இன்னும் வரக்காணோமே! (நினைந்து நிமிர்ந்து) கண்ணாளரே! கைவிட மாட்டேன் என்றீரே! அது பொய்யா? அன்பே! என் தந்தையும் என்னை அந்தக் கிழத்துக்கே கட்டிவைக்க ஏற்பாடு செய்து விட்டாரே! இரண்டு நாட்களில் எனது கல்யாண நாளும் நெருங்கி விடுமே!

கன்னிகா மாடத்தைச் சுற்றிலும் கடுமையான கட்டுக்காவல் ஏற்படுத்தியிருப்பதுடன் என்னையும் கண்காணித்து வருகிறாரே என்பிதா அந்தோ!

---

## காட்சி 27

இடம்: மறுபுறம். காலம்: மங்கின இருள்.

(விஜயேந்திரனும் வீரகுமாரனும் நந்தவனத்தின் மதில்மேல் ஏறிக்குதிக்கவும்)

(காவலர்கள மெதுவாக வந்து பிடித்துக் கொள்கின்றனர்)

காவலர் தலைவன் :—ஆப்டீங்களாடா திருட்டுப் பயல்களா! (பலபேர் ஓடிவந்து சூழ்ந்து கட்டுகின்றனர்)

இவர்களைக் கட்டினபடியே கோட்டை விடுதியில் பூட்டிவையுங்கள்! விடியவும் அரசரிடம் கொண்டு போகலாம்.

வீர :—பே! ஏ! ஏ! (ஊமை நடிப்பு)

விஜ :—(ஓங்கி) "வந்தேன் ஒரு வாரத்தில்"!

(கொண்டு போதல்)

---

## காட்சி 28

இடம்: சந்திரபுரி அரசவை. காலம்: காலை.

(ஜெயச்சந்திர மன்னரும் உத்தம பூப மந்திரியும் மற்ற பிரதானிகளும் சூழ இருக்க)

(காவலர்தலைவன் வந்து வணங்கி நிமிர்ந்து நிற்க, வாளேந்திய வீரர்கள், விஜயேந்திரனையும் வீரகுமாரனையும் கொண்டு வந்து கட்டுக்களைக் கழற்ற)

காவலர் தலைவன் :—அரசே! இந்தத் திருடர்கள் இராத்திரி நமது கன்னிகாமாட நந்தவனச் சுவறில் ஏறிக் குதிக்கும் போது பிடித்தோம்! (வீரகுமாரனைக் காட்டி) இவன் ஒரு ஊமை.

ஜெய :—மகிழ்ச்சி! (திரும்பி) இவருக்கு நல்ல வெகுமதிகளைக் கொடுத்தனுப்பும்!

(ஒரு மந்திரியும் காவலர்தலைவனும் வணங்கிப் போகிறார்கள்)

அடே நீ எந்த ஊர்?

விஜ :—இருந்த ஊர்,

ஜெய :—என்ன (சினவியப்பு) இருந்த ஊரா? உஞ்ஹூம்! உம்!—உன்பேர்?

விஜ :—மனிதன்.

ஜெய :—(சினந்தெழுந்து வாளையுருவி) மூர்க்கப்பதரே! செய்யத்தகாத பெரிய குற்றத்தைச் செய்தது மன்றி கேட்ட கேள்விகளுக்குக் கிரமமாகப் பதில் சொல்லாமல் பரிகாசமுமா செய்கிறாய்?

உத்தமபூப மந்திரி :—(குறுக்கிட்டு) அரசே! சாந்தி! சற்று பொறுமையுடன் இருந்தால் நான் விசாரணை செய்ய விரும்புகிறேன்.

ஜெய :—ஐயன்மீர்! அவ்விதமே ஆகட்டும்.

உத்தம .—அடே! நீ எந்த ஊர்?

விஜ :—இருந்த ஊரே தான்.

உத்தம :—(தனக்குள்) இது என்ன? இவன் கூறும் விஷமப் பதில்களைக் கேட்டும் இவன் மீது ஏதோ ஒரு விதப் பற்றுதலும் பரிவும் ஏற்படுகிறதே தவிர வெறுப்பு ஏற்படவில்லையே. மேலும் இவனுடைய தோற்றத்தில் எனது ஆருயிர்ப் பத்தினியின் சாயலும் மின்னிட்டுத தர்மாட்சியை நினைப்பூட்டுவதாயிருக்கிறதே! (திரும்பி) அடே நீ அடம்சாதிப்பது அல்லலைத்தான் தரும் உண்மையைச் சொல்லிவிடு! உன் பேர் என்ன?

விஜ :—மனிதன்.

உத்த :—மனிதனு? (யோசித்து) ஓஹோ! இன்னும் பார்ப்போம! (திரும்பி) நீ எங்கே வந்தாய்?

விஜ :—இங்கே வந்தேன்.

உத்தம :—அதுவஞ்சரி! இன்னும் பார்ப்போம் (பார்த்து) வந்தவன் எதற்காக சுவறேறினுய் கன்னிகா மாடத்தில்?

விஜ :—சந்திராங்கனையைச் சந்திக்க.

(ஜெயச்சந்திரன் சினந்தெழுந்து வாளை உருவவும்)

உத்தம :—(கையைப் பிடித்துத் தடுத்து) அண்ணலே! ஆறுவது சினம். அவைக்களத்தைச் சவக்களமாக்கல் அறமாகாது. இன்னும் தீர்க்கமாக விசாரித்து சிட்சை செய்யலாம்! மன்னிக்கவும்! (அரசன் ஆறுதல் அடைந்து அமரவும்) (திரும்பி) இன்னுரென்று அறிமுகமில்லாத நீ ஏன் சந்திராவைச் சந்திக்க வந்தாய்?

விஜ —ஏனே வந்தேன்.

உத்தம :—(திரும்பி சேவகனிடம் இரகசியமாக சொல்லியனுப்பி விட்டு) அப்படியானுல் நீ சுவறேறியது குற்றந்தானே?

விஜ :—இது எந்த முட்டாளுக்குந் தெரியுமே!

உத்தம :—அடே! நீ என்னதான் குதர்க்கமாகப் பேசினுலும் எனக்கு உன்மேல் கோபமே வரவில்லை.

விஜ :—அதுவும் என் போதாத காலந்தான்.

உத்தம :—(திரும்பி) அரசே! இவன் வாழ்வில் விரக்தி யடைந்து, இவ்வாறு சாவை விரும்பி வார்த்தையாடு கிறான் தாறுமாறாக. (திரும்பிப் பார்த்து) சொல்லிவிடு உள்ளதை! நீயார்? ஏன் வந்தாய்?

விஜ :—மறுபடி மறுபடியும் கிளறிக்கிளறிக் கேட்டு என் வருத்தத்தை வளர்க்காதீர்.

உத்தம :—வருத்தத்தை வாய்விட்டுச் சொன்னால் மனஆறு தல் பெற வழியுண்டு. இன்றேல் அழிவுதான் உண்டு. இது இராஜாங்கக் குற்றம் மட்டுமல்ல, அரச குடும்ப சம்பந்தமான குற்றமுங்கூட. இதற்குக் கடு மையான கொடிய தண்டனை கிடைக்கும்.

விஜ :—கிடைக்கட்டும்! நன்றாய்க் கிடைக்கட்டும்.

---

## காட்சி 29

மறுபுறம் : அரண்மனைக் கோட்டை வாசல். காலம் : பகல்.

(காவலர் இருவர் ஊன்றிய வேலாயுதங்களோடு நிற்க, இளவரசி சந்திரா வேகமாக வந்து உள்ளே செல்லப் போகும்போது)

காவலன்-1 :—அனுமதியின்றி உள்ளே யாரும் பிரவேசிக் கக் கூடாது.

காவலன்-2 :—இது அரசர் பிரானின் கடின கட்டளை.

சந்திரா :—என் தந்தையைப் பார்க்க வேண்டும் நான்.

காவ-1 :—அங்கே இப்போது விசாரணை நடந்து கொண் டிருக்கிறது

காவ-2 :—அதனால் யாரையும் உள்ளே அனுமதிக்கக் கூடாது

காவ-1 :—என்று அரச கட்டளை.

சந்திரா :—இளவரசியாகிய நான் என் தந்தையைப் பார்ப்பதற்கும் அநுமதி வேண்டுமோ?

(என்று கூறி, குறுக்கே தடுத்திருந்த வேலாயுதங்களைப் பிடித்துத் தள்ளியபடியே உட்செல்லல்)

---

## காட்சி 30

இடம் : அரசவை. விசாரணை நடந்துகொண்டிருக்குமிடம்.

உத்தம :—என்ன? உண்மையாகவா சொல்லுகிறாய்?

விஜ :—ஆம்! அதிலும் மரண தண்டனையை மனமார வரவேற்கிறேன்.

சந்திரா :—(காவலர்களை ஆயுதங்களைப் பிடித்துத் தள்ளியபடியே பிரவேசித்து, நின்று, கேட்டதும் நிமிர்ந்து நின்று) ஆ! மரண தண்டனை! (திகைப்பு)

ஜெய :—சந்திரா! இதென்ன அலங்கோலம்?

சந்திரா :—(விஜயேந்திரனை நெருங்கி) நாதா!

ஜெய :—(துடித்துப் பற்கடித்து) ஆ ஆ! அவமானம் அவமானம்! அந்தப்புரத்திலிருந்து அரசவைக்கு வந்தது மல்லாமல் என் முன்னிலையிலேயே அன்னியனை, அதிலும் கேவலம் கைதியாக நிற்கும் கள்வனை நாதா என்றழைக்கத் துணிந்து, என் குலத்துக்கே அழியாப் பழியை விளைத்த அடங்காப் பிடாரியே! என் குலப்பழியை நீக்கக் கொலைப்பலி யிடுகிறேன் உன்னைக் கொன்று (வாளையுருவ)

உத்தம :—(தடுத்து) பெண் கொலை பெரும்பாவம். அரசே! அமைதி பெறுக!

ஜெய :—(வாளை உறையில் போட்டுக்கொண்டு விஜயேந்திரனை நோக்கி) கட்டுக்காவலை மீறி கன்னிகா மாடத்தில் கள்

ளத் தனமாசப் பிரவேசித்த கபவனே! உனக்கு மரண தண்டனை—

சந்திரா:—(எதிர்வந்து நிமிர்ந்து நின்று) நிறுத்துங்கள்! யாருக்கு மரண தண்டனை? மன்னனுக்கு மகளாகப் பிறந்து மதலைப் பிராயத்திலேயே மாதாவைப் பிரிந்து மங்கைப் பருவமடைந்துள்ள என்னை வயோதிகனும் மடையனுமான ஒரு மாமிச மலைக்குத் தாரை வார்த்து மணம் செய்து கொடுக்க எண்ணின எதிர்கால வாழ்க்கையைப் பாழ்படுத்த முற்பட்ட படுபாவியாகிய உமக்கு மரண தண்டனை.

என்னை அந்தப் படுகிழட்டுப் பிணத்துக்குப் பாணிக்கிரஹணம் செய்து கொடுத்த கொஞ்ச நாளிலேயே அவன் இறந்து விடவும் அவன் நாட்டையும் கட்டி ஆண்டு கொள்ளலாமென்று மனப்பால் குடித்து மண்ணாசை பிடித்து பெண்ணான என் வாழ்க்கையை உமது பேராசைப் பேய்க்குப் பலி கொடுக்க நினைத்த உமக்கு மரண தண்டனை.

உற்ற பருவம் வந்த ஒரே ஒரு மகளுக்கு உரிய காலத்தில் பொருத்தமான ஒருவரைப் பார்த்து திருமணம் முடித்து வைக்கும் நினைவேயில்லாமல் அறவே மறந்து மரணத்தின் வாசற்படியில் நிற்கும் உமக்கு மறுமணம் செய்ய ஒரு இளம் பெண்ணை எங்கெங்கோ தேடியலைந்து கிடைக்காததால் இறுதியில் என்னைப் பாழுங்கிணற்றில் தளளுவது போல் தள்ளி, ஒரு கிழவனுக்கு மணமுடித்து அந்தக் கிழவனின் இளம் மகளை நீர் மணமுடித்து மகா பாதக தகாத இச்சையைப் பூர்த்திசெய்துகொள்ளநிச்சயித்துள்ள உமக்கு மரண தண்டனை.

கன்னிப் பெண்ணானவள் கண்டதும் காதல் என்றபடி, அவசர முடிவாக இல்லாமல் சகலவகைகளிலும் தனக்கு இசைந்த ஒருவரை இணைத்துக் கொள்வதை அநுமதியாமல், பெற்றோர்கள் தங்கள்

இஷ்டப்படி வற்புறுத்திப் பிணைக்கும் குரூரனையோ, கொலைகாரனையோ, குடிகாரனையோ குடுகுடு கிழவனையோ ஏற்றுக் கொண்டுதான் ஆகவேண்டும் என்று நிர்ப்பந்திக்கும் சமூகப் பழக்க வழக்க அமைப்புக்கு மரண தண்டனை.

காமவெறிகொண்ட காமுகக் காதகன், சாமுகூர்த்தங் கிட்டிய சவக்கோலப்பாதகன். பேத்திக்குப்பேத்தி போன்ற என்னைப் பிணமணம் செய்ய ஆத்திரங் கொண்டு சூத்திரப் பாவைபோல் சுற்றிச் சுற்றியலைந்து துன்புறுத்திய ஊத்தைச் சடல ஒதிய மரம் போன்ற உலுத்தனுக்கு மரண தண்டனை

இவ்வளவு அலங்கோல அட்டூழியங்களையும் அறிந்து கொண்டு அரசர் மனம்போல ஆடிநடித்து அக்ரமத்துக்குப் பக்கம் பாடி அதர்மத்துக்குத் தாளம் போட்டு அமைச்சரென வீற்று ஆருக்கோ வந்த விருந்தென்று அலட்சியமாக இருந்து வரும் ஆகாரக் கோலேனுருக்கு மரண தண்டனை.

யாருக்கு மரண தண்டனை? இஷ்டமில்லாத பெண்ணை இம்சைபுரிந்து கஷ்டப்படுததிக் கற்பழிக்க முற்பட்ட காதகனைக் கண்டித்து மாதர்குல மானத்தைக்காத்த மகாபுருஷருக்கா மரண தண்டனை?

மானிட வாழ்க்கையில் மனிதர்கள் கடைப் பிடிக்க வேண்டிய மார்க்கங்கள் அனைத்துமே ஒருருவாகப் பரிணமித்துள்ள பேருபகாரப் பெருந் தகைக்கா மரண தண்டனை?

ஐஸ்வரிய மெல்லாம் இழந்து ஆரண்யத்திலே ஆசிரமவாசியாய் அலைந்து திரிந்த ஆணழகன் அன்று அகோரமாகப் பாய்ந்து கொல்ல விரைந்த சிங்கத்தைப் பங்கம் செய்து ஆபத்தான வேளையில் அலறிய அபலைக்கு அபயம் தந்து ஆருயிர் காத்து ஆதரித்த ஆப்தனுனவர் அறிமுகமில்லாதவராயிருந்தும் அந்தரங்க ஆத்மீக அன்புவயப்பட்டு அருமை மணாளனுக ஏற்று அறவாழ்க்கை நடத்தி அந்தகனை வென்ற ஆர

ணங்கார் திலகம் சாவித்திரிதேவி பிறந்த இந் நாட்டிலே பிறந்த நான் பெண்ணினத்தின் பிறப்புரிமையை இழந்து பேடிப்பேதையாக வாழமாட்டேன்.

முழநீளத்தில் தலேப்பாகை முடியணிந்து நிற்கும் முதல் மந்திரியாரே! மந்திரிக்கழகு வரும்பொருள் உரைத்தல் என்பது என் விஷயத்தில் மறு பொருள் உரைத்தல் ஆகிவிட்டதோ?

தளகர்த்தப் பிரதானிகளே! நியாய சபை அங்கத்தினர்களே! பிரபஞ்ச அபிவிர்த்திப் பீடமாகிய பெண்மக்களின் கூடப்பிறந்த பிறவிகளே! குலக்கொடி தழைக்கக் குதலேச் செல்வங்களை யீன்ற கோகிலாப் பெற்ருேர்களே! (திரும்பி) வனிதா! (வனிதா கொண்டு வந்திருந்த பெரிய படத்தை வாங்கிக் காட்டி) பாருங்கள்! இந்தப் படத்திலுள்ள பாழும் குருபியைப் பாருங்கள்! (எல்லோருக்கும் காட்டி) நன்ருகப் பாருங்கள்! இதோ என் தந்தையைக் காட்டிலும் பல மடங்கு வயதில் மூத்த பழுத்த கிழமான இந்த ஜடத்தைக் கட்டியழுகச் சொல்கிருர் என் தந்தை. இதனுல் எனது வாழ்க்கையைப் பாழ்படுத்திய தோடல்லாமல் என்னைக் கெடுத்து, பதிலுக்கு அந்தக் கிழவனின் இளம் பெண்ணை என் பிதா மணந்து "தாலி கட்டிய தாத்தாவாக" அமைந்து அந்தப் பெண்ணை ஆருத் துயர்க்குழியில் ஆழ்த்தி "வைக்கோல்போர்ச சுணங்கன்" போல இருக்க முற்பட்டு முற்றுகையிட்டு நிற்கும் முது பெருங் கிழங்களின் மோசத்தனத்தை யோசித்துப் பாருங்கள்! அந்தோ! நீங்களெல்லாம் என் போன்ற பெண் மக்களுடன் பிறக்க வில்லையா?

நியாயத்துக்கும் நியதிக்கும், அரசனும் ஆண்டியும் ஒன்றுதான். இதோ பாருங்கள்! (விஜயேந்திரனைக் காட்டி) இந்தச் சுகுமார இளந் தோன்றலே, அரச வழிவந்த ஆண்டகையை, உத்தம குண நல

மிக்க ஒழுக்க சீலரை உற்ற மணவாளராக வரித்துள்ளேன் இது குற்றமா?

ஏன் சும்மா இருக்கிறீர்கள் பதில் கூறாமல். ஏழை பேச்சு அம்பலம் ஏறாது என்பதினாலேயா?

என்னைப் பலாத்காரமாக துன்புறுத்திய அந்தக் கிழப் பைசாசத்தைக் குப்புற வீழ்த்தி அப்புறப் படுத்திய ஒப்புயர் வற்ற செம்மலை மணக்க நான்தான் முதலில் தெரிவித்து அவரை இணங்கச் செய்தேன். இது குற்றமானால், நானே குற்றவாளி. முதலில் தண்டிக்கப் படவேண்டியது நான்தான். ஆகவே அந்த மரண தண்டனையை நானே ஏற்றுக் கொள்கிறேன், அவரை விடுதலை செய்யுங்கள்!

கொடுங்கள் நீதிக்கும் நேர்மைக்கும் மரண தண்டனை. கொடுங்கள்! உம்!

சபையோர் :—வேண்டாம் வேண்டாம் மரணதண்டனை வேண்டாம்! இளவரசி சொல்வது முற்றிலும் ஞாயம்.

(சபையோர் அமரவும்)

தர்மாட்சி :—(நுழைந்து விஜயேந்திரனைப் பார்த்துத் திகைத்து) ஆஹ்! கண்ணே விஜயேந்திரா!

விஜ :—அம்மா! அம்மா! (இருவரும் அன்புஅணைப்பு) அம்மா! இதோ (காட்டி) இளவரசர் வீரகுமாரர்

தர்மா :—(வியபபோடு) இளவரசே!

வீர :—அன்னையே! வணக்கம்!

தர்மா :—(உத்தம பூபரைப்பார்த்து) சுவாமி! இதோ நம் மகன் (திரும்பி) கண்ணே விஜயேந்த்ரா! அன்று கேட்டாயே இதோ உன் தந்தை.

விஜ :—அப்பா! வணக்கம்!

உத்தம:—(அணைப்பு) வாழ்க!

சந்திரா :—ஆருயிர்க் காதலரே!

விஜ :—அன்போங்கும் மலரே!

உத்தம :—ஜெயச்சந்த்ர பூபதே! என்மகன்! (திரும்பி) அப்பா! (அரசரைக் காட்டி) இவர் என்னை ஆதரித்த அரசர்.

விஜ :—(முன்வந்து) வணக்கம்! (வீரகுமாரனைக் காட்டி) தந்தையே! இவர் எம்மை ஆதரித்த அரசகுமாரர்.

வீர :—வணக்கம்!

உத்தம :—வாழ்க!

ஜெய :—(விஜயேந்திரனைப் பார்த்து) நீடூழி வாழ்க! (உத்தமரைப் பார்த்து) உத்தமரே! உங்கள் வரலாற்றை இப்போதாவது சொல்லுங்கள்!

உத்த :—ஜெயச்சந்திர அரசே! உத்தமநாட்டு மன்னன் உத்தமபூபதி நான்.

ஜெய :—(திடுக்கிட்டுத் திகைத்து) ஆ! உத்தம நாடு!

உத்தம :—ஆமாம்! பீமாங்கதன் என் தம்பிதான். எனது மனைவி இந்தத் தர்மாட்சி கருவுற்றதை யறிந்து, பட்டத்துக்குப் பிள்ளை பிறந்து விடுமென்று எண்ணி பொறாமை மேலீட்டால் எனக்குப் பைத்தியம் பிடித்து விட்டடது என்று நாட்டு மக்களை நம்பச் செய்து சிம்மாதன மேறினான். நிறை கொர்ப்பத்தோடு என் பத்தினி தர்மாட்சியை நிசியோடு நீசியாய்க் காட்டில் கொண்டு போய் விட்டு விட்டான் மற்றவை தாங்களறிந்ததே.

ஜெய:—ஆ! பீமாங்கதன் தங்கள் தம்பியா? இத்தகைய வஞ்சகனுக்கா என் பெண்ணைக் கொடுக்க இருந்தேன். ஐயோ! என்னே அசம்பாவிதம் நேர இருந்தது!

பீமாங்கதன் :— (தனக்குத் தானே கட்டியங் கூறிவந்து) மகா ராஜ ராஜ ராஜ மார்த்தாண்ட ராஜ கம்பீர மதன

சிங்கார தீர வீர பராக்கிரம மாமாண்பு மிக்க பீமாங்கத பூமான் வருகிறார் பராக்! பராக்!

மாதரார் திலகம் சந்திராங்கனு தேவியை மணமாலை சூட வருகிறார். மாட்சிமை தங்கிய உத்தமநாட்டரசர் சித்தஜ ரூப ஜெய விஜய பீமாங்கத பூமான் பராக்! பராக்!

(நுழைந்து நடந்து கொண்டே நிமிர்ந்து பார்க்க விஜேயந்திரன் நிற்பதைக் கண்டதும் பதறி ஓங்கிக்குதித்து)

ஐயையோ! பழைய பூதம்! (ஓட முயலவும்)

வீர :—(பிடித்து நிறுத்தி) அது மட்டுமல்ல அதோ பாரும்! அந்தப் பூதத்தை யீன்ற தாய்ப் பூதத்தையும் தகப் தகப்பனார்ப் பூதத்தையும்.

பீமாங்கதன் :—(தர்மாட்சி உத்தம பூபதி இருவரையும் பார்த்துப் பிரமித்துத் திகைத்து மருண்டு ஓடித் தப்பித்துக் கொள்ள முயலவும)

வீர :—(மீண்டும் பிடித்து நிறுத்தி.) உம்மை அறைந்த இந்தப் பூதம் யார் தெரியுமா? உத்தமநாட்டு இளவரசர். உன்னால் காட்டில் விடப்பட்ட சர்ப்பிணி தர்மாட்சி தேவியின் கர்ப்பத்தில் உற்பத்தியான சற்புத்ர சிகாமணி. தெரிகிறதா?

பீமா :—ஐயையோ! மோசம் போனேனே! (ஓடமுயலல்)

வீர :—(குறுக்கிட்டுத் தடுத்து) மோசம் செய்தாயே அப்போது—.

பீமா :—(பெரியோர்கள் முன் ஓடிவிழுந்து) அண்ணா! அண்ணி! மன்னிக்க வேண்டும்! மன்னிக்கவும் மனம் வரக்கூடாத மகாகொடும் பாதகங்களைச் செய்த இந்த மாபெருஞ் சண்டாளனை மன்னிப்பீர்களா?

அன்னையினும் அன்பு கூர்ந்து என்னை ஆதரித்த ஆன்றோர்களே! கெடுமதியுடையவர்களின் பேச்சைக் கேட்டுக் கெட்டுப்போனேன். தீயவர்களின் சேர்க்கைகளால் சீரழிந்து, தாய்தந்தை போன்ற தூயவர்களாகிய தங்களுக்குத் துரோகம் புரிந்து துன்பம் விளைத்

தேன். சொல்லவும் வாய்கூசும் தொல்லைகளைத் துணிந்து செய்தேன்.

உத்தம :—(பரிவோ ) பீமாங்கதா! எழுந்திரு! தவறுவது இயற்கை. தான் செய்த தவறை உணர்ந்து சிந்தை நோவதே அதற்குச் சாந்திமுறை. புரிந்த பிழைக்காக வருந்துபவரை மன்னிப்பதே மனிதத் தன்மை. இதோ அண்ணி, மகன், இவர்களைப் பார்த்து பரவசப்படு!

பீமா :—(அப்படியே மூளை குழம்பி பைத்தியமாகி) யார்? ஆ! அண்ணி! கெர்ப்பிணி! அண்ணன், பைத்தியன். இருட்டு, காடு, பேய்! பேய்! அவ்வளவும பேய்கள், ஆ! (அலறிகண்மூடி) ஐயோ! பயங்கரம்! இருட்டறை, கஞ்சி (பயந்து கன்னத்தைப் பிடித்து) ஐயையோ! ஒரே அடி! பல்லுப்போய் இரத்தம்! ஐயோ! என்னை விட்டு விடுங்களே!

(துணிகளைக் கிழித்துக் கொண்டு ஓட்டமெடுக்கிருன்)

சபையோர் :—பைத்தியம்! பைத்தியம்! பிடிதது அடையுங்கள்!

வீர :—எல்லோரும் புறப்படுங்கள்! எமது விஜயபுரி செல்வோம்! ஜெயச்சந்த்ர மன்னரே! குற்றவாளிக்கு

ஜெய :—கொடுக்கப் போகிறேன் தக்க தண்டனை.

வீர :—என்ன ?

ஜெய :—குலக்கொடி சந்த்ராவைக் கோலமணம் செய்து.

வீர :—மகிழ்ச்சி!

ஜெய :—அதுமட்டுமல்ல; நல்ல நாளிலே நாட்டையும் முடிசூட்டி நங்கைக்கும் திருநாண்பூட்டி நானிலமெங்கும் பாராட்டி வாழ்த்துக் கூறும் வண்ணம் புரிய எனது விருப்பம்.

வீர :—விருப்பம் வெற்றிகரமாக விரைவில் நிறைவேறட்டும்.

## காட்சி 31

இடம் : ஆலகாலன் விடுதி. காலம் : பகல்

(ஆலகாலனும் நாகநாதனும் அமர்ந்திருக்க அதியுக்தன் ஓடிவந்து நுழைதல்)

நாகநாதன் :—உண்மையில்லாத உலகம்.

ஆலகாலன் ;—உணரும் காலம் வரும்.

அதியு :—(அவசரமாகப் புகுந்து) அமைச்சரே! தூக்குமேடையேறிய விஜயேந்திரனை வீரகுமாரன் மீட்டுச் சென்று விட்டானாமே!

ஆல :—கனவு கண்டாயா என்ன ?

நாக :—இல்லை அமைச்சரே! உண்மை ; குகைச்சுரங்க சிறையிலிருந்து வீரகுமாரன் ஓடிய செய்தி எனக்கு அன்றே கிடைத்துவிட்டது அதை உம்மிடம் சொல்லவில்லை.

ஆல :—ஏன் சொல்லவில்லை ?

நாக :—சொல்லி....?

ஆல :—சொல்லியும் பயனில்லையென்னும் முடிவுக்கு நீரே வந்துவிட்டீரோ? இதோடு தீர்ந்துவிட்டதோ உமது மூளை ?

நாக :—தொட்டதெல்லாம் தோல்வி. பட்டதற் கெல்லாம் பலன் பாழ்.

ஆல :—அப்படியானால் சுத்தவீரனுக்கு மாட்டிய தூக்குக் கயிற்றிலே நாமே தொங்க நேர்ந்தாலும் நேருமோ ?

நாக :—அதற்கும் துணியத்தான் வேண்டும்.

ஆல :—அடப்பாவி! உன்னோடு சேர்ந்ததற்கு உயர் பதவிக்குப் பதிலாக உயிருக்கே விபத்து உண்டாக்கி விட்டாயே!

நாக :—யாரைக்காணும் பாவியென்கிறாய் படுபாவி!

அல :—உன்பேச்சைக் கேட்டு ஒருமிக்கக் கெட்டுப் போனேனே.

நாக :—உன்னாலே நான் கெட்டேன்.

ஆல :—உன்னாலே நான் கெட்டேன்

அதியு :—உங்கள் இருவராலேயும் நான் கெட்டேன்.

சேவகர்தலைவன் ;—(திடீரென்று நுழைந்து) அடே நீங்கள் மூவரும் அரசாங்கக் கைதிகள். இளவரசர் வீரகுமாரர் உத்திரவு. அந்தப் பக்கம் இந்தப் பக்கம் அசையக் கூடாது.(சேவகர் வரவும் பார்த்து) அடே இவர்கள் கைகளில் விலங்கு பூட்டுங்கள் !

அதியு :—என்னையுமா ?

சேவ :—உன்னையும் உன் அப்பனையுங்கூட.

அதியு :—என் அப்பன் செத்துப் போய் விட்டாரே.

சேவ :—அவரிடம் உன்னை அனுப்பத்தான் இந்த விலங்கு வா ! (திரும்பி) ஆட்டம் போட்டீங்களடா ஆட்டம் ! இப்போ காட்டுங்க உங்க கை வரிசையைப் பார்ப் போம! நடங்கடா !

சேவ :—என்னடா ராஜநடை, அன்ன நடை போடுறிங்க. நடங்கடா வேகமா ராஜத்துரோக நயவஞ்சக நாயிங் களா (போகிறார்கள்)

---

## காட்சி 32

இடம்: விஜயபுரி, வெற்றிவீர அரசவை. காலம் : பகல்

(வெற்றிவீர வேந்தன், மந்திரி பிரதானிகள் விஜயேந்திரன், வீரகுமாரன், உத்தமபூபதி தர்மாட்சி, ஜெயச்சந்திர மன்னன், மகா ஜனங்கள் எல்லோரும் முறையே வீற்றிருக்க)

வெற்றி :—(கடிதத்தை வாசித்து விட்டு) கையொப்பம் என்னுடையது போலவே இருக்கிறது. ஆனல் இந்த நிருபம் நான் எழுதச் சொல்லவுமில்லை இதில் நான் கையொப்பம் இடவுமில்லை. இது உறுதி. நன்ருக ஞாபகப்படுத்திப் பார்த்து இறுதியான உறுதியாகவே கூறுகிறேன், இந்த நிருபத்துக்கும் எனக்கும் எந்தவிதத் தொடர்புமேயில்லை.

விஜயேந்த்ரா ! தர்மாட்சி ! என்னை மன்னிபபீர்களா ? உண்மை உணராது உததமர்களாகிய உங்களை உயிர்வாதைப்படுத்திய என்னைக் கொன்ருலும் நான் செய்த கொடுமை தீராது. என்னைக் கொன்று விடுங்கள் உங்கள் கையால், அதுதான் நீங்கள் எனககு அளிக்கும் மன்னிப்பு ஆகும்.

(என்று தர்மாட்சிமுன் வீழ்ந்து வணங்க)

தர்மா :—(தடுத்து) அண்ணு ! உங்கள் உப்பைத் தின்று வாழ்ந்த எங்களிடமா மன்னிப்பு ? வேண்டாம் (பார்த்து) அண்ணு ! உங்கள் பேரில் யாதொரு தவறுமில்லை.

(கைதிகளாக ஆலகாலன், நாகநாதன், அதியுக்தன்மூவருமவரவும்,

வெற்றி :—எல்லாம் இந்தச் சண்டாளர்களின் சதிச் செயலகளே காரணம் (பார்த்து) அடே நாகநாதா ! "நாகநாதன்" நல்ல உண்மையான பெயா. படிபடியாகப் பால் வார்த்து வளர்த்தாலும் பாய்ந்து கொல்லும்

நாகப்பாம்பே! (நிருபத்தைக் காட்டி) இது யாருடைய வேலே? யாருடைய கையொப்பம்?

நாக:—(நடுங்கி) கையொப்பம் (ஆலகாலனைக் காட்டி) அவருடையது. யோசனை என்னுடையது. திட்டத்தை நிறைவேற்றி பட்டப் பகலில் நடித்து உபசேனாதிபதிப் பட்டம் பெற்றது இவன் (அதியுக்தனைக் காட்டல்)

வெற்றி:—ஆ! ஆ! சதிக்கூட்டம் (பற்கடித்து சினக்குறி)

ஆல:—அரசே! அறியாமல் செய்த பிழையை

வெற்றி:—ச்சை பேசாதே! மோசக்கார நீசனே பேசாதே! தெரியாமற் செய்துள்ள சிறுபிழைகளா இவைகள்? வேணுமென்றே திட்டமிட்டு வேலே செய்த விஷப்பூச்சிகளே! உங்களே வேரோடு நசுக்கிக் கொல்லவேண்டுமே யல்லாமல் விட்டாலே பாபம் கிட்டும.

அறியாமல் செய்த பிழையாம்! சண்டாளத் துரோகியே! அறியாமல் தொட்டாலும் அனல் சுடத்தானே செய்யும்.

ஏய் யாரங்கே! இவர்கள் மூவரையும் கழுவிலேற்றுங்கள்!

விஜ:—வேண்டாம்! வேந்தே! வேண்டாம!

தீமை செய்தோர்க்கும் நன்மை செய்யவேண்டும். இவர்களே மன்னியுங்சள்! மன்னிப்பு இவர்களின் வாழ்க்கையைச் சீர்திருத்தட்டும்!

வெற்றி:—சதிகாரச் சண்டாளர்களே! தர்மாட்சி மாதாவின் தாமரைப் பாதங்களில் தாழ்ந்து வணங்குங்கள்! வஞ்சனைக் கென்றே பிறந்துவளர்ந்த வம்பர்களே! பார்த்தீர்களா விஜயேந்திரப் பெருந்தகையின் மேலாங் கருணையை!

(மூவரும் விஜயேந்திரனை வணங்கப்போக)

விஜ :—(தடுத்து) நில்லுங்கள்! என் காலவினைக்கு நீங்கள் என்ன செய்வீர்கள்? தவறை உணர்ந்தாலே போதும்! வணக்கம் எனக்கு வேண்டாம்!

(அப்படியே மூவரும் தர்மாட்சி காலில் விழுந்து வணங்கவும்)

தர்மா :—திருந்திய உங்களை தெய்வம் காப்பாற்றட்டும்!

ஜெய :—வெற்றிவீரரே! புறப்படும்! உத்தம நாடு சென்று தங்கள் தளபதிக்கு இளவரசுப் பட்டமும் திருமண மும முடித்து வருவோம்!

வெற்றி :—ஆம்! அதுதான் அவனுக்கேற்ற மாற்றுத் தண்டனை. (வாளை யேந்தி) 'இதோ! வெற்றியின் பரிசாக அன்று நான் கொடுத்த "வீரவாள்"!

(விஜயேந்திரன் வணங்கி வாங்கவும்) வாழ்க விஜயேந்திர! வெல்க விஜயேந்திர!

---

## காட்சி 33

இடம்: உத்தமபுரி அரசவை — காலம்: பகல்

(மகரிஷி இந்திரானந்தர்உட்பட சகலரும் முறையே ஆசனங்களில் அமர்ந்திருக்க)

உத்தமபூபதி :—(எழுந்து நின்று) அன்பும், அறிவும், ஆற்றலும், அருளும் மிக்க ஆன்றோர்களே!

அவனிபுகழும் இந்த உத்தம நாட்டு மன்னனாக மகுடந்தாங்கி அரசு செலுத்திய என்னை ஆதரித்தது போலவே எனது அருந்தவப் புதல்வன் விஜேயேந்திரனையும் ஆமோதித்து உங்கள் அரசனாக ஏற்று ஆதரிக்க வேணுமாக அனைவரையும் முறையே வேண்டிக் கொள்கிறேன்

பிறந்தது முதல் பெரியவனாகும் பிராயம் வரை வளர்த்து, பேரும் புகழும் பெற்று விளங்க, பெரிதும்

உதவியாயிருந்த பீடுடைய சாந்தி மகாத்மாவே! தங்கள் திருக்கரங்களினலேயே தனயன் விஜயேந்திரனுக்கு முடிசூட்டுவிழா நிறைவேறட்டும்!

இந்திரானந்த "சாந்தி மகாத்மா":—அவையோர்களே! அரசாளப் பிறந்த மகன் ஊழ்வினைப்பயனால் காடு புகுந்தான். ஆண்டவன் அருளால் ஆளும் நாட்டை மீளவும் அடைந்தான்.

பொதுமக்களே! விஜயேந்திரன் சுத்த வீரன், சுதந்திர தீரன், நேர்மைக்குணாளன், நீதியின் உருவம், பொறுமைப் பொக்கிஷம்.

இன்று முதல் உத்தம நாட்டின் பட்டத்தரசனாக விளங்குவான். எல்லாம் வல்ல இறைவன் இவனுக்கு நீண்ட ஆயுளையும் நிறைந்த வாழ்வையும அருள்வானாக!

நாட்டு மக்களாகிய உங்களின் சார்பாக இந்த நன்மணி மகுடத்தைச் சூட்டுகிறேன் விஜயேந்திரனுக்கு. வாழ்க விஜயேந்திர பூபதி!

சபையோர்:—வாழ்க விஜயேந்திர பூபதி!

விஜ:—(எழுந்து) அனைவருக்கும் எனது அன்புநிறைந்த வணக்கம்.

(மந்திரி ஒரு தாம்பாளத்தில் உடைவாள் ஒன்றை விஜயேந்திரனுக்கு முன் ஏந்தி நிற்கவும்)

போதும்! விசேடத்தன்மை பொருந்திய

(தன் இடையில் அணிந்துள்ளதை உருவிக் காட்டி)

இந்த "வீரவாள்" ஒன்றே போதும்! எல்லோரும் மகிழ்வோடு குழுமி யிருக்கும் இன்பமான நல்ல நேரத்திலே இந்த வீரவாளுக்கும் எனது இதய பூர்வ வணக்கத்தைச் செலுததிக் கொள்ளுகிறேன்.

விஜயபுரி வேந்தர் வெற்றி வீரபூபதி முன் வாட் போரில் வெற்றியடைந்ததற்காக நான் இந்த "வீரவாள்" பரிசு பெற்றதைச் சகிக்காது நண்பர் தளபதி நாகநாதர் அன்று என் மீது கொண்ட சவஞ்சத்தின் விளைவே இன்றைய காட்சிகளெல்லாம்.

பிரிந்த பெற்றோர்களைப் பெற்றதும், சிறந்த காதலியைச் சேர்ந்ததும், இழந்த நாட்டை மீண்டும அடைநததும் இந்த "வீரவாள்" விவகாரத்தின் காரண மாக ஏற்பட்ட விளைவுகளின் பலன் தானே!

ஆகவே இந்த "வீரவாள்" என் வாழ் நாள் முழு வதும் என் கையிலேயே வென்றி ஓங்கி மிளிர வாழ்த் துங்கள்! அதுவே போதும்.

வீர:—வீரவாள் வெகுமதி யடைந்த "தளபதி" பதவியை வியாச்சியமாகக் கொண்டு ஒரு பெரிய விரிவான நாடகமே நடந்து விட்டது வெற்றிகரமாக. வெல்க ர வாள்!

சபையோர்:—வெல்க வீரவாள்!

விஜ:—மேலும், தளபதியாக இருந்து தரணிக்குச் சேவை செய்து வந்த நான். தற்போது "தளபதி" யாக ஆக்கப்பட்டாலும், முன்னைய நிலையிலேயே நின்று, "ஜன சர்க்கார்" முறையில் சமூகக் காவலனான "தளபதி" யாகவே அமர்ந்து பொதுநல ஆட்சி புரி வேன் மக்களின் பிரதிநிதியாக என்று உறுதிகூறி நிர்வாகத்தை ஏற்றுக்கொள்கிறேன். வணக்கம்!

இந்திரானந்த சாந்தி மகாத்மா:—சமூக தளபதி வாழ்க! "ஒறுத்தார்க் கொருநாளை இன்பம், பொறுத்தார்க் குப் பொன்றுந் துணையும் புகழ்!"

"வாழிய செந்தமிழ்! வாழ்க நற்றமிழர்!

வாழிய பாரத மணித் திருநாடு.



Jyothi Printers, Madras-1.

"நாடகக் கலை ஆசிரியர்"

வீ. எஸ். வீரநாதக்கோனார் அவர்கள் இயற்றிய

நாடகங்கள் :

| | | | |
|---|---|---|---|
| முழுநிலா | (சமூகம்) | கட்டப்பொம்மு | (சரித்திரம்) |
| திருநாள் | ,, | மகன் | ,, |
| நாடகம் | ,, | பாரிவேள் | ,, |

★

## "தளபதி" நாடகப் புத்தகம்

கிடைக்குமிடங்கள் :—

முகுந்தன் அண்டு கம்பெனி
7, கிருஷ்ணப்ப நாயகன் அக்ரகாரத் தெரு,
ஜி. டி. சென்னை.

தமிழ்ப்பண்ணை
தியாகராயநகர், சென்னை.

விவேகானந்தா புக் டிப்போ
புது மண்டபம், மதுரை.

பாரதி புத்தக நிலையம்
வக்கீல் புதுத்தெரு, மதுரை.

பழனியப்பா பிரதர்ஸ்
தெப்பக்குளம், திருச்சி.

டி. வி. இரத்தினப்பா
காரியதரிசி,
நாடகத் தொழிலாளர் கழகம்
சேலம் டவுன்.